ஸ்ரீ:



# பாசுரப்படி - திருவாய்மொழி

[திருவாய்மொழி - பத்துப்பத்தின் பொருட்போக்கு]

தொகுப்பாளர் : குருகூர்நம்பி (இராம. பொன்னப்பன்.)



பாமன்னு மாறன் அடிபணியும் பல்கலையோர் சரணாரவிந்தம்
தான் மன்னி வாழும் எந்தை இராமன் (நடுவில்)

## சமர்ப்பணம்

**ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் அமுதத் திருவாய்**
**ஈரத்தமிழின் இன்னிசை மன்னுமிடந்தொறும் புக்கு நிற்கும்**
**குணந்திகழ் கொண்டல் எந்தை இராமன் சென்னிக்கு அணியாக்கித்**
**தொண்டு கொண்டேன் மாறன் மனம் காட்டும் இப்பனுவலையே.**

அக்டோபர் 2006

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :



# பராங்குஶாஷ்டகம்

[ஆசார்யர்கள் பலர் அருளியது]

த்ரைவித்3 யவ்ருத்3 த4ஜநமூர்த்த4 விபூ4ஷணம் யத்
ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதே3வ நித்யம் ।
யத்3வா ஶரண்யமஶரண்யஜநஸ்ய புண்யம்
தத் ஸம்ஶ்ரயேம வகுலாப4ரணாங்க்4ரியுக்3மம் ॥

ப4க்திப்ரப4ாவப4 வத3த்3பு4 தப4ாவப3ந்த4
ஸந்து4க்ஷிதப்ரணயஸாரரஸௌக4பூர்ண: ।
வேத3ார்த்த2 ரத்நநிதி4 ரச்யுததி3வ்யத4ாம
ஜீயாத் பராங்குஶபயோதி4 ரஸீமபூ4மா ॥

ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண –
த்ருஷ்ணா தத்த்வ மிவோதி3தம் ।
ஸஹஸ்ரஶாக2ாம் யோத்3 ராக்ஷீத்
த்3ராமிடீ3ம் ப்3ரஹ்மஸம்ஹிதாம் ॥

யத்3கோ3ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாரயணோ வஸதி யத்ர ஸஶங்க2 சக்ர: ।
யந்மண்ட3லம் ஶ்ருதிக3தம் ப்ரணமந்தி விப்ரா :
தஸ்மை நமோ வகுலபூ4ஷண ப4ாஸ்கராய ॥

பத்யு : ஶ்ரிய : ப்ரஸாதே3ந ப்ராப்த ஸார்வஜ்ஞஸம்பத3ம் ।
ப்ரபந்ந ஜநகூடஸ்த2ம் ப்ரபத்3யே ஸ்ரீபராங்குஶம் ॥

ஶட2கோபமுநிம் வந்தே3 ஶடாநாம் பு3த்3தி4 தூ3ஷகம் ।
அஜ்ஞாநாம் ஜ்ஞாநஜநகம் திந்த்ரிணீ மூலஸம்ஶ்ரயம் ॥

வகுலாப4ரணம் வந்தே3 ஜக3த3ாப4ரணம் முநிம் ।
யஶ் ஶ்ருதேருத்தரம் ப4ாக3ம் சக்ரே த்3ராவிட3ப4ாஷயா ॥

நமஜ்ஜநஸ்ய சித்த பி4த்தி ப4க்திசித்ர தூலிகா
ப4வாஹி வீர்யப4ஞ்ஜநே நரேந்த்3ரமந்த்ரயந்த்ரணா ।
ப்ரபந்நலோககைரவப்ரஸந்நசாருசந்த்3ரிகா
ஶட2ாரிஹஸ்தமுத்3ரிகா ஹட2ாத் து4நோது மே தம : ॥

வகுளாலங்க்ருதம் ஸ்ரீமச் ச2ட2கோபபத3த்3வயம் ।
அஸ்மத்குலத4நம் போ4க்3யம் அஸ்து மே மூர்த்4நி பூ4ஷணம் ॥

ஸ்ரீ:



# பாசுரப்படி - திருவாய்மொழி

[திருவாய்மொழி - பத்துப்பத்தின் பொருட்போக்கு]

தொகுப்பாளர்

குருகூர்நம்பி

(இராம. பொன்னப்பன்.)

45, துரைராஜ் தெரு,

திருநகர்,

சென்னை - 600 087.

Ph. : 24862864

## சமர்ப்பணம்

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் அமுதத் திருவாய்
ஈரத்தமிழின் இன்னிசை மன்னுமிடந்தொறும் புக்கு நிற்கும்
குணந்திகழ் கொண்டல் எந்தை இராமன் சென்னிக்கு அணியாக்கித்
தொண்டு கொண்டேன் மாறன் மனம் காட்டும் இப்பனுவலையே.

அக்டோபர் 2006

First Edition : October 2006



Title - PASURAPPATI THIRUVAIMOLI

Author : Kuruhoor Nambi (R. Ponnappan)

No. of Copies : 1000

No. of Pages: 140

Size of the Book : Demi 1/8

Books available with : R. Ponnappan
45, Durairaj Street,
Thirunagar, Valasaravakkam,
Chennai - 87.
Phone : 2486 2864

| |
|---|
| This book is published with the financial assistance of the Thirumala - Thirupathi Devasthanams under their scheme " Aid to publish religious books" |
| The author of the book is alone liable for any legal action at his own risk and responsibility in case of disputes or criticism if any arises after the publication of the book. |

Price : Rs. 40/-

Printed at : SRI KRISHNA PRINTERS
No. 81, Rajendran Street,
Thirunagar, Chennai - 600 087.

## About the Work - Pasurappati Thiruvaimoli

By Kuruhoor Nambi (R. Ponnappan)

Sri Vaishnava Literature is replete with Commentaries on Nalayira Divya Prabandha and related works adopting a judicious combination of Tamil and Sanskrit. This Commentary Tradition has a strong Tamil and Sanskrit base.

The Ramayana and the Bhagavata were introduced to the Tamil audience in a novel way by using bits and phrases culled from Divya Prabandha. The names of holy places glorified by Alvars, which are respectfully referred to as Divya-desas have also been strung together using Divya Prabandha passages and presented as mnemomics.

A similar attempt is now being made to convey the import of Nammalvar's Tiruvaimoli by stringing together phrases and sentences taken from the same Text.

Sri Alagiya - manavala Perumal Nayanar (13th Cent.) has in his inimitable work 'Acharya-hrudayam' (Prakarana IV), brought out the import of Tiruvaimoli and this work continues to be a treat to scholars. Such a precious work has come to be adorned by an erudite commentary by Sri Manavala-mamunikal (14th-15th Cent.). Deriving inspiration from these works, the present work has been attempted strictly following their line of treatment. Wherever needed the original texts are supplemented with brief explanations to facilitate easy understanding and a smooth flow.

The Lord of Vaikuntha Himself has come down in iconic form to Thirukuruhoor as Athippiran to bless the devotees says Nammalvar in Ontrum Thevum in the fourth century of Thiruvoimoli. The author has presented in a dramatic way the essence of that decad as explained by

Acharyas establishing the supremacy of Athippiran at Thirukkuruhoor and advising the people to go to that sacred place to have his blessings.

The author ices the cake by giving the essence of each decad of Thiruvoimoli in a crisp lyric form following the Thiruvoimoli Nutranthathi by Sri Manavalamamunigal using the same phrases from the text with meaning of words of traditional usage, in foot note for easy understanding.

In short the compilation deserves praise for its cogent, clear and compact presentation of the rich content of Thiruvoimoli by Swami Nammalvar.

A reading of the present work will certainly kindle a taste for not only reading the original texts and commentaries but also understanding their meaning. Like Tiruvaimoli the present work also can be committed to memory and recited, if desired. The speciality of the present work lies in its limited use of Manipravala style and the links in Tamil providing clear exposition.

**Dr.Prof. A. Thiruvengadathan, M.A., Ph.D.,**
Head, Dept. of Sanskrit,
Former Principal, D.G. Vaishnav College,
Chennai - 600 106 &
M.O.P. Vaishnav College For Women,
Chennai - 600 034.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:; ஸ்ரீமதே பாலதந்வி மஹாகுரவே நம:;
ஸ்ரீமத் வரவரமுநயே நம:; சடகோப மஹாகுரவே நம:

## மனம் விட்டு .......... ஒருசில வார்த்தை

"பாசுரப்படி - திருவாய்மொழி" இச்சிறுநூல் இன்று உங்கள் கையை அலங்கரிக்கிறது. அடியேன் சிறிய ஞானத்தன். ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய நூல்களை குருமுகேன அறியும் வகை இழந்து பழுதே பல பகலும் கழித்தவன். என்றாலும் பூர்வ ஜன்ம வாசனையாலே அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிய ஆசார்ய ஹ்ருதயம் - திருவாய்மொழி - பத்துப்பத்தின் சாரமாக உள்ள சூத்திரங்களை அநுசந்திக்கையில்; - திவ்யப்ரபந்த வரிகளைக் - கொண்டே தொகுத்தெழுந்த - பாசுரப்படி - இராமாயணம், பாகவதம் போலே - பாசுர வரிகளைக் கொண்டே திருவாய்மொழிப் பொருட்போக்கைத் தொகுத்தால் என்ன ? என்ற விழைவின் பரிணமிப்பே இச்சிறுநூல்.

ஆசார்யஹ்ருதய நூலில் திருவாய்மொழி - பத்துப் பத்தின் சாரமாக -அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிகாச புராணங்களிலும் அருளிச்செயல்களிலும் உள்ள சொற்றுணுக்குகளைக் கொண்டு செறிவுற ஆக்கிய சூத்திரங்களுக்கு ஸ்ரீ மணவாள மாமுநிகள் அருளிய விளக்கவுரையில் காட்டப்பட்ட திருவாய்மொழிப் பாசுர வரிகளை எடுத்தாண்டு - வேண்டிய இடங்களில் மட்டும் சுருங்கிய விளக்கமும் தந்து - ஒவ்வொரு பத்தின் சாரம் அமையும்படியாகத் தொகுத்தளிக்கும் சிறிய முயற்சியே இந்நூல் உருவாக்கத்தில் எளியேனின் பங்கு ஆகும்.திருவாய்மொழிப் பாசுரங்கள் வரியடைவே "திருவாய்மொழி நுவல் பொருட்போக்கு" என்பதே நூல் தலைப்பிற்குப் பொருள்.

ஆசார்யஹ்ருதயம் - சூத்திரங்களை எளியேன் புரிந்து கொள்வதற்கும் இயன்ற அளவில் திருவாய்மொழிப் பொருளை எளிய தமிழ் நடையில் தொகுப்பதற்கும் கீர்த்தி மூர்த்தியான ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி அருளிய "ஆசார்ய ஹ்ருதயம்-பதவுரை

– தாத்பர்ய ஸாரம்" என்ற நூலும் சென்னைப்பல்கலைகழக முன்னாள் பேராசிரியர் பண்டித வித்வான் ஸ்ரீமான் புருஷோத்தம நாயுடு அவர்கள் அருளிய "ஆசார்ய ஹ்ருதயம் - தமிழாக்கம்" என்ற நூலும் பெரிதும் துணை நின்றன என்பதை நன்றிப்பெருக்குடன் தெரிவித்துக் கொள்கிறேன். படிப்பு ஓட்டமும் கிராஹ்யமும் தடைப்படாமைக்காக நிறுத்த வேண்டிய இடங்கள் தனித்தனி வரிகளாக்கிக் கட்டமைப்புச் செய்துள்ளேன்.

ஒவ்வொரு பத்திற்கும் – ஸ்ரீ மணவாள மாமுநிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதித் தொடர்களைக் கொண்டே அப்பத்தின் சாரம் தரவும் முயன்றுள்ளேன்.

இச்சிறு நூலாகிய மலரினை அடியேனுடைய திருத்தகப்பனார் ஆழ்வார்திருநகரி கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ உ. வே. R. P. இராமய்யங்கார் ஸ்வாமியின் சென்னிக்கு அணியாக அணிவிக்கிறேன். இவரைப்பற்றி..........................

இவர் பரமசாத்விகர். ஆழ்வார்திருநகரி இளையவில்லி திருமாளிகை கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ உ.வே இளையவில்லி சடகோபாச்சாரியார் ஸ்வாமியின் திருவடிகளில் ஆச்ரயித்தவர். ஆசார்ய பக்தியில் வடுகர். ஆசார்யனாலே போர உகக்கப்பெற்று ஸத்ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் – ஈடு முதலியவற்றை காலக்ஷேபமாக அருளப்பெற்றவர். ஆழ்வார் திருநகரி தொடர்புடைய பொதுக்காரியங்களில் இந்த ஸ்வாமியின் கருத்துக்கேட்டு நடப்பது அவ்வூர்வாசிகள் ஸ்வாமிக்குச் செய்த சிறப்பு. கீர்த்தி மூர்த்தி ஸ்ரீ உ.வே. வேளுக்குடி வரதாச்சார்யார் ஸ்வாமியினால் போர உகக்கப் பெற்றவர்.

இந்த ஸ்வாமியின் தேவி (அடியேனுடைய திருத்தாயார்) – ஆழ்வானின் தேவி ஆண்டாளுக்கு நிகரானவர். இவர் பெயரும் ஆண்டாளே. குணத்தை ஆள்பவள்; குணத்தாலும் ஆள்பவள். இவ்விருவருடைய பொழுதுபோக்கு ஸத்ஸம்ப்ரதாய கருத்துப் பரிமாற்றமே. இருவரும் பரஸ்பரம் பாக்யசாலிகள்.

இவ்விருவருடய குணங்களையும் ஞானத்தையும் ப்ரதிபலிக்கும் பாக்யம் அடியேனுக்கில்லை. அடியேன் வேண்டுவது இன்னும் பல பிறவி.

அப்பல பிறவிகளிலும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய நிழலிலே ஒதுங்கி ஸ்ரீ வைஷ்ணவ சம்ப்ரதாய ஞானம் அனைத்தும் அடைவே பெற்று ஞான அநுட்டானமுடையவனாய் விளங்கப் பேராசையுடையேன். இந் நூலைப் படிப்பவர்கள் அடியேனின் இந்தப் பேராசை நிறைவேற குன்ற மெடுத்த பிரானடியாரோடு ஒன்றி நின்ற ஸ்ரீ சடகோபனை முன்னிட்டு ஸ்ரீமந்நாராயணனிடம் ப்ரார்த்திக்க வேண்டுகிறேன். இச் சிறு நூலினை என் நெஞ்சினால் நோக்கிக்கண்டு ஆட்செய்து ஸ்ரீ சடகோபனைச் சார்ந்தவன் ஆக்கித்தருவது உங்கள் க்ருபையில்.

அடியேனுடைய சிற்றறிவினாலும் க்ராஹ்யக் குறைவினாலும் வடமொழி ஞானமின்மையாலும் ஏற்பட்ட கருத்துக் குற்றங்களையும், குற்றங்கள் பிறவற்றையும் சுட்டிக் காட்டித் திருத்திப் பணிகொள்ள வேண்டுகிறேன். நீச்சல் தெரியாதவன் பெருக்காற்றிலே தானே குதித்தது ஒக்கும் அடியேன் இம்முயற்சியில் இழிந்த நிலை. கைதூக்கி விடுவீர்கள் என நம்புகிறேன்.

**"ஊரோ குருகூர் உவந்தென்னைப் பெற்றோரோ**
**ஆராத அன்பின் ஆண்டாளும் - ஸ்ரீ ராம**
**வித்தகனும் என்னில் இவைவாய்ந்த மேதினியில்**
**எத்தவங்கள் செய்திட்டேன் யான்.**

**பசுமை நிகழ்ச்சி ஒன்று :**

இந்நூல் வெளிவரும் இத்தருணத்தில் என் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சியையும் - பொருத்தமாக இருப்பதால் - இங்குக் குறிப்பிட என் மனம் விழைகிறது. என்னுடைய இளமைப் பருவத்தில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ.வே. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி உபந்யாஸங்களாலும், அவர் அருளிய திவ்யார்த்த தீபிகை உரைகளாலும் ஈர்க்கப்பட்டவன் அடியேன். ஏப்ரல் 1977ல் ஸ்வாமியைப்பற்றி என் மனத்தில் தோன்றிய எண்ணத்தினைக் கீழ்வரும் மூன்று வெண்பாக்களாக எழுதி ஸ்வாமிக்கு அனுப்பினேன். அவை வருமாறு :-

1) சீர்மன்னு மாமுனிவன் சிந்தை தனையோர்ந்து
பார்புகழ வேபரப்பும் பண்பாள ! - ஆரியனே !
அண்ணங்க ராசார்ய அன்புருவே நின்பதங்கள்
திண்ணமாய்ப் பற்றினேன் தேர்ந்து.

2) திருவரங்கர் பன்னு திருப்பாவை பாடி
ஒருவரங் கொண்டோங்கு முயர்வால் - மருவுபுகழ்
"எம் அண்ணா !" வென்றழைத்த எம்பெருமானாரையே
உம்வடிவில் கண்டேன் உகந்து.

3) முன்னோர் மொழிந்த மொழிதன்னைத் தப்பாமே
பின்னோரும் போற்றும் பெருமைத்தாய் - மன்னியசீர்
திவ்யார்த்த தீபிகையைச் செய்தளித்த நின்செயற்குச்
செவ்வியகைம் மாறுண்டோ செப்பு.

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்
ஸ்ரீ.உ.வே. அண்ணங்கராசார்யார் ஸ்வாமி



அக்காலம் அடியேன் ஸ்வாமியை நேரில் பார்த்துப் பேசி என்னை நினைவில் கொள்ளும்படியான பரிச்சயம் இல்லாதவன். என்றாலும் அந்தமஹான் மறு தபாலில் 30.4.1977 - அடியேனுக்கு ஆசி வழங்கி தம்முடைய ஒரு நூலினையும் பரிசாக அனுப்பியிருந்தார். **"அந்த நூல் வேறேதுமில்லை - அவர் எழுதிய ஆசார்ய ஹ்ருதயம் - பதவுரை - தாத்பர்யஸாரமே."**

45, துரைராஜ் தெரு, திருநகர்,
வளசரவாக்கம், சென்னை - 600 087.
Ph. : 24862864

தாஸன்
குருகூர்நம்பி
(இராம. பொன்னப்பன்.)

## நன்றி நவிலல்

இந்நூலின் கையெழுத்துப் ப்ரதியினைப் படித்துத் திருத்தி அடியேனை ஆட்கொண்டவர் அடியேனுடைய ஆசார்யன் ஆழ்வார்திருநகரி ஸ்ரீஸூக்தி ரத்னாகரம் ஸ்ரீ உ. வே. இளையவில்லி சடகோபாச்சார்யார் ஸ்வாமியின் குமாரரும் தற்பொழுது ஆசார்ய பீடத்தை அலங்கரிப்பவருமான ஸ்ரீ உ.வே. இளையவில்லி ஸ்ரீநிவாஸ பூவராஹாசார்யார் ஸ்வாமி ஆவார். அவர் "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய" என்று ஸ்வாமி ஆளவந்தார் அருளியபடியே - அடியேனுடைய திருத்தகப்பனாரும் - தம்முடைய மாதுலருமான (மாமா) கீர்த்தி மூர்த்தி ஸ்ரீ உ.வே R.P. இராமய்யங்கார் ஸ்வாமியின்பால் - அவருடைய ஆத்மகுண பூர்த்தியாலும் - ஆசார்ய நிஷ்டை காரணத்தாலும் கொண்ட ப்ரீதி அடியேனளவும் ப்ரவஹிப்பதைப் ப்ரகாசப்படுத்தும்படியாக அழகியதொரு அணிந்துரை இந்நூலுக்கு வழங்கி அடியேனைப் பெருமைப்படுத்தியுள்ளார். ஸ்வாமியின் திருவடிகளிற் சென்னி வைத்து வணங்கி எளியேனின் நன்றியறிதலை முதற்கண் புலப்படுத்திக் கொள்கிறேன்.

தட்டச்சுப் ப்ரதியினைப் பார்த்து அச்சில் வெளிவருதல் நலம் என்று ஊக்குவித்த பெரியோர்கள் பலர் .

**ஸ்ரீ உ.வே டாக்டர் வி.வி. ராமாநுஜன் ஸ்வாமி,**
[(ஓய்வுபெற்ற வேதியியல் பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்), ஆசிரியர் - "யதிராஜ பாதுகா" ]

**திருவிண்ணகர் ஸ்ரீ உ.வே. டாக்டர் V. N. வேதாந்த தேசிகன் ஸ்வாமி,**
(ஓய்வுபெற்ற வேதியியல் பேராசிரியர், மதுரைக் கல்லூரி, மதுரை )

**திருச்சித்திரகூடம் ஸ்ரீ உ. வே. டாக்டர் A. V. ரங்காச்சார்யார் ஸ்வாமி,**
(ஓய்வுபெற்ற பொருளாதாரத் துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்),

**மதுரை ஸ்ரீ உ. வே டாக்டர் அரங்கராஜன் ஸ்வாமி**
(ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர், மதுரைக் கல்லூரி, மதுரை)

திரு. டாக்டர். ம.பெ. ஸ்ரீநிவாஸன் அவர்கள் (ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர், R.D.M. கல்லூரி, சிவகங்கை), இப்பெரியோர்களுக்கு என்றென்றும் நன்றி உடையவன் ஆவேன்.

இந்நூலினைப் படித்து நெறிப்படுத்தி - இதன் மாண்பினை புலப்படுத்தும் படியான “ நூல் நுவல் பொருள்” (Synopsis) அருளிய வடமொழிப் பேராசிரியரும் முன்னாள் முதல்வருமான (டி. ஜி. வைஷ்ணவக் கல்லூரி - சென்னை) ஸ்ரீ உ.வே. டாக்டர் . திருவேங்கடத்தான் ஸ்வாமிக்கும் நன்றியைப் புலப்படுத்திக்கொள்கிறேன்.

என்னுடைய கெழுதகை நண்பரும் மதுரைக் கல்லூரித் தமிழ்த் துறையில் உடன் பணியாற்றியவருமான அருட்கவிச் செல்வர் வித்வான் V. துரைசாமி எம். ஏ., அவர்கள் பாராட்டுக்கவி அருளிச் சிறப்புச் செய்தமைக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

இந்நூல் வெளியிடுவதற்குப் பொருளுதவி நல்கத் துணை நின்ற திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் அனைவருக்கும் மிகவும் நன்றியுடையேன்.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுதவிய ஸ்ரீ கிருஷ்ணா அச்சகத்தாருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உண்டியே உடையே பெண்டிரே பொருளே என்றே
நின்றவா நில்லா நெஞ்சினை உடையனான என்
சிந்தையுள் புகுந்து திருத்தி இயக்கி தன் பணி தானே
செய்வித்துக் கொண்ட திருமகள் கேள்வன் பெருங்கருணைத்
திறத்தினை நினைந்து அத் திவ்ய தம்பதிகள் திருவடிகளில் சென்னி வைத்து
வணங்கி விடைபெறுகிறேன்.

நன்றி ! வணக்கம். !

தாஸன்
குருகூர்நம்பி
(இராம. பொன்னப்பன்.)



ஸ்ரீஸூக்தி ரத்னாகரம் ஸ்ரீ உ. வே. இளையவில்லி
சடகோபாச்சார்யார் ஸ்வாமி (அடியேனின் ஆசார்யன்)

ஸ்ரீநிவாஸ கு$_3$ரோஸ்ஸூனும் அநந்தார்ய குலோத்ப$_4$வம் ।
பா$_3$லத$_4$ந்வி குலோத் தம்ஸம் ஶடகோப கு$_3$ரும் ப$_4$ஜே ॥

## ஆசார்ய வணக்கமும் பிழை பொறுக்க வேண்டுதலும்

வானோங்கு யதுகிரியில் வந்துதித்து
வளனார்ந்த குருகை நகர் வாழவந்து
வானமாமலை முனிவன்பால் வேதந் தேர்ந்து
வண்டமிழ் நாலாயிரத்தை வடித்துக் கூறும்
“கோனெனும் ஸ்ரீநிவாஸாசாரியார் தம்”
குலம் விளங்க வந்த சடகோப குருவே!
திருவடியில் சென்னிவைத்து வணங்குகின்றேன்.
தேனெனும் நும் பெருங்கருணைத் திறத்தினாலே
திவ்ய திருவாய்மொழியின் திறத்தை இன்று
தேர்ந்துரைக்கத் துணிந்திட்டேன் பிழை பொறுப்பீர்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:; ஸ்ரீமதே பாலதந்வி மஹாகுரவே நம:;
ஸ்ரீமத் வரவரமுநயே நம:;

# அணிந்துரை

[ஸ்ரீ உ.வே.இளையவில்லி ஸ்ரீநிவாஸ பூவராஹாசார்யார் ஸ்வாமி, M.A.
ஓய்வுபெற்ற வடமொழிப் பேராசிரியர், ஆழ்வார்திருநகரி]

ஆசார்ய ஹ்ருதயம் என்னும் அருமையான மணிப்ரவாள நூல் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்னும் பேராசிரியப் பெருந்தகையாரால் இயற்றப்பட்டது, இவரை ஸ்ரீவைஷ்ண உலகத்தினர் திருவரங்கப் பெருமாள் கோவிலில் எழுந்தருளியிருக்கும் உற்சவ மூர்த்தியான அழகிய மணவாளனின் அவதாரமாகவே போற்றிப் பணிந்து துதிக்கின்றனர். (இதைப்பற்றிய விவரத்தை "யதீந்த்ரப்ரவணப் ப்ரபாவம்" என்னும் சரித்திர நூலில் காணலாம்). இவருடைய திருத்தமயனார் பிள்ளை உலகாசிரியர் ஆவர். அண்ணனும் தம்பியும் ஸ்ரீவைஷ்ணவ உலகுக்குச் செய்த உபகாரங்கள் அளவிடற்பாலதன்று. இவர்கள் இருவரும் ரஹஸ்ய நூல்கள் பல இயற்றியிருந்தாலும் அவற்றுள் பிள்ளை உலகாசிரியர் இயற்றிய ஸ்ரீவசன பூஷணமும் நாயனார் இயற்றிய ஆசார்ய ஹ்ருதயமும் ஒன்றுக்கொன்று உறுதுணையாக அமையப்பெற்று ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இரு கண்களாக விளங்கும் சிறப்புப் பெற்ற நூல்களாகும். இவைகளைக் கொண்டே நாம் ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயச் சிறப்புப் பொருள்களையெல்லாம் தெள்ளத் தெளிய அறிகிறோம்.

அதில் "ஆசார்ய ஹ்ருதயம்" - ஆசார்யரான ஸ்வாமி நம்மாழ்வாரின் நான்கு திவ்யப்ரபந்தங்களின் கருத்துக்களை மிக விரிவாகக் காட்டும் உயர்ந்த நூலாகும். இது நான்கு ப்ரகரணங்கள் (பாகங்கள்) கொண்டதாகும். அதில் நான்காவது ப்ரகரணத்தில் ஸ்வாமி நம்மாழ்வாருடைய திருவாய்மொழியின் பத்துப்பத்துகளில் அமைந்துள்ள கருத்தினை மிகத் தெளிவாகப் பத்துப் பெரிய சூர்ணைகளாலே அருளிச் செய்துள்ளார். அதற்கு விசுதவாக் சிகாமணியான மணவாள மாமுநிகளின் விரிவான தெளிந்த தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்ததான உரை அமைந்திருக்கிறது. அவ்வுரை அநேகமாக ஒரே வரியில்

அமைந்துள்ளதால் ஆசார்யர்களிடம் காலக்ஷேபம் கேட்டாலொழிய அதன் கருத்தினைப் புரிந்துகொள்வதரிது. அடியேனுடைய திருக்தகப்பனார் ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் ஸ்ரீ ஸூக்தி ரத்னாகரம் இளையவில்லி சடகோபாச்சார்யார் ஸ்வாமியின் திருவடித்தாமரையில் ஆச்ரயிக்கும் பேறு பெற்றவனும் அடியேனுடைய அம்மான் சேயுமான ஸ்ரீமான் சிரஞ்ஜீவி R. பொன்னப்பன் M.A. M.Phil திருவாய்மொழி பத்துப்பத்தின் பொருளாகத் தொகுத்துச் சுட்டும் ஆச்சார்ய ஹ்ருதய சூர்ணைகள் தரும் சாரத்தினை எல்லோரும் புரிந்துகொள்ளும் வண்ணம் மாமுநிகளின் வ்யாக்யானங்களைப் பின்பற்றியே இனிய எளிய தமிழ்நடையில் எழுதியுள்ளமை மிகவும் போற்றுதற்குரிய செயலாகும். மேலும் இது ஒரு பெரியஆசார்ய கைங்கர்யமுமாகும்.

அடியேனுடைய திருத்தகப்பனாரும் இவனுடைய ஆசார்யருமான ஸ்ரீ உ.வே. இளையவில்லி சடகோபாச்சார்யார் ஸ்வாமி "ஆசார்ய ஹ்ருதயத்தில்" மிகமிக ஈடுபாடு கொண்டவர். அவருக்கு "ஸ்ரீ ஸூக்தி ரத்னாகரம்" என்கிற விருதினை அளித்தவர் ஸ்ரீ உ.வே. மஹாவித்வான் ஜகதாச்சார்ய ஸிம்ஹாசனாதிபதி காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி ஆவர். இவ்விருது அளிப்பதற்கு முக்கிய காரணம் அடியேனுடைய திருத்தகப்பனார் எழுதும் ஸ்ரீமுகங்களில் (கடிதங்கள்) எல்லாம் ஆசார்ய ஹ்ருதய நடையிலேயே திவ்ய ஸ்ரீசூக்திகளையும் இதிகாச புராண வசனங்களையும் கோர்த்து எழுதும் திறமைபெற்றவராகத் திகழ்ந்ததனால் ஆகும். ஆகவே ஆசார்ய ஹ்ருதயத்தில் அவர் ஈடுபட்டிருந்தமையால் அவருடைய பேரன்பிற்கு இலக்காய் விளங்கி வரும் சிரஞ்ஜீவி R. பொன்னப்பனும் அவர் உகந்த கைங்கர்யத்தையே செய்கிறான் ஆகிறான்.

இந்நூலில், சிறுசிறுவாக்கியங்களாக மாமுநிகளின் வ்யாக்யானக் கருத்தினைப் பண்டிதர்களும் பாமரர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் தெளிவாகச் சுருக்கமாகத் திருவாய்மொழித் தொடர்களோடு இணைத்து எழுதியுள்ளான். இதனால் எல்லோரும் திருவாய்மொழிப் பத்துப்பத்துக்களில் ஆழ்வார் என்ன கூறியுள்ளார் என்பதை ஓரளவு நன்றாக அறிந்துகொள்ள

இயலும். எல்லோரும் இதனைப் படித்த பிறகு இந்த நான்காம் ப்ரகரண ஸூத்திரங்களையும் அதன் வியாக்யானத்தையும் படித்து மிக இன்பம் எய்துவார்கள் என்பதில் அடியேனுக்குச் சிறிதும் ஐயமில்லை. ஒவ்வொரு பத்தின் இறுதியில் ஸ்வாமி மணவாள மாமுநிகள் அருளிய சொற்செறிவும் பொருட்செறிவும் கொண்ட திருவாய்மொழி நூற்றந்தாதி வெண்பாக்களின் தொடர்களைக் கொண்டே அப்பத்தின் சாரம் தொகுத்து அளித்திருப்பதும் பாராட்டுக்குரியது. இப்படிப்பட்ட சிறந்த தொண்டு புரிந்த சிரஞ்ஜீவி R. பொன்னப்பனுக்கு ஆசார்ய பரிபூர்ண க்ருபா கடாக்ஷம் ஏற்பட்டு **"வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே"** என்கிற நம்மாழ்வாரின் பரம விலக்ஷணமான வாழ்த்துக்கு இலக்காய் அரோக த்ருடகாத்திரனாய் மனைவி மக்களுடன் இந்நில உலகில் நெடுநாள் வாழ்ந்து இப்படிப்பட்ட பல அரிய ஸ்ரீ வைஷ்ணவத் தொண்டுகளைச் செய்து கொண்டு விலக்ஷண வ்யக்தியாய் விளங்கவேணும் என்று ஆண்டாளைப் புருஷகாரமாகக் கொண்டு ஸ்ரீரங்கமன்னார் திருவடித்தாமரைகளில் ப்ரார்த்தித்து நிற்கிறேன்.

**பொலிக ! பொலிக ! பொலிக!**

பெங்களூர்
October 2006

இங்ஙனம்
**இளையவில்லி ஸ்ரீநிவாஸ பூவராஹாசார்யன்.**



**ஸ்ரீ.உ.வே. இளையவில்லி ஸ்ரீநிவாஸ பூவராஹாசார்யார் ஸ்வாமி**

பா,லத,ந்வி வம்ஶஸிந்து, பூர்ணசந்த்,ர ஸந்நிப,ம்
ஸ்ரீஶடா,ரி ஸூநுவர்யம் ஆச்ரிதம்ச தத்பதே, |
தத்,த,யைவ லப்,த,யுக்,மம் வேத,ஸார போ,த,கம்
ஸ்ரீநிவாஸ பூ,வராஹ தே,ஶிகம்தம் ஆஶ்ரயே ||

கலைவாணி துணை

# அணிந்துரை

அருள்நெறிக் கவிஞர் - அருட்கவிச் செல்வர்
பேராசிரியர் கவிஞர். வித்வான் வீ. துரைசாமி எம். ஏ.

"அத்தைத்தின் றங்கே கிடக்கு"மென் றமுத
வாக்கினால் அகிலமே வியக்கச்
சத்துக்குள் சத்தாம் அருமறைப் பொருளைச்
சகத்தினுக் குரைக்கவந் துதித்த
முத்தன்வண் குருகூர்ப் புளிநிழ லமர்ந்த
முதல்வன்றான் அமுதமாய்ப் பொழிந்த
தித்திக்கும் திருவாய் மொழியெனுந் தேனைத்
திருமகள் கேள்வனே சுவைப்பான்!

தண்டமிழாசான் இராமனென் பவர்க்குத்
தகவுடைப் புதல்வனாய் வந்து
வண்டமிழ்த் திறமும் வைணவச் சமய
வண்ணமும் வாய்த்திட்ட நல்லோன்
கண்டுபோல் சுவைக்கப் பாசுரப் படித்திரு
வாய்மொழி கற்பவர் மகிழ
விண்டுரை செய்தான் முந்தையோர் வழியில் !
வியப்பிதில் ஒன்றுமே யில்லை.

"அடிக்கீ ழமர்ந்து புகுமினோ அடியீர்"
என்னவே ஆண்டவன் உரைத்த
படிக்குநாம் அவனைச் சரணடை வதுவே
பாருளோர்க் கொரேவழி யாகும் !

வடிக்கணை தொடுக்கும் இராமபி ரான்பால்
வந்து சேர்ந் திட்ட வீடணனின்
முடிக்கணியாக மகுடத்தைச் சூட்டும்
முதல்வனின் செயலறி வோமே.

பாசுரப் படிரா மாயணம் மற்றும்
பாசுரப் படிபா கவதம் என்னும்
தேசுடை நூல்கள் அருளிய முன்னோர்
தெரிவித்த வழியில்**பொன் னப்பன்**
மாசிலாத் திருவாய் மொழிவரி களையே
மாண்புற ஆங்காங்கு காட்டி
வாசிபெற் றுயர்ந்த தமதுரையாலே
தொகுப்புரை வழங்கினன் கண்டீர் !

மணிப்பிர வாள நடையினில் முன்னோர்
மானிடம் உய்ந்திட அருளும்
அணிமிகு நடையால் **இராமபொன் னப்பன்**
ஆக்கிய அமுதத்தைப் பருகித்
தணிவிலாப் பரமா னந்தமெய் திடலாம்
அரங்கனின் தாளிணை புகலாம்!
பணிவுடைக் கடல்போல் பாரித்த புலமைப்
**பொன்னப்பன் நெடிதுவா ழியவே.**
*******************************



தம் க்ரஹத்து திருவாராதனப் பெருமாள்கள் - ஆசார்யர்களை
வழிபட்டுநிற்கும் எந்தாயும் எந்தையும்
எம் இளவல் இராமாநுசனும்

திருக்குருகூர் வாழ்வார்தம் சிந்தை நிறையும்
மருக்குழலி ஆண்டாள் மறைசொல் - திருக்குணங்கள்
வாய்ந்த ஸ்ரீராமன் இவர் மைந்தனாய் வந்துதித்தேன்
ஏய்ந்த பெருந்தவத் தேனே.

நும்மகவாகப் பிறக்க நோற்பேன் வருபிறப்பும்
அம்ம வதுகிட்ட வருள்கென்று - கைம்மிசையே
சங்காழி யேந்தினான் தாழிணையே கைதொழுவேன்
பொங்கார் வத்தோடும் புகழ்ந்து.

குருகூர்நம்பி
(இராம. பொன்னப்பன்

## இந்து உயர்நிலைப் பள்ளி, ஆழ்வார்திருநகரி

**தமிழாசிரியர் திரு. இராம. பொன். இராமன் அவர்களுக்கு**
**ஆசிரியர் சங்கத்தினர் வாசித்தளிக்கும்**
**அவர்தம் குணம் செப்பும்**

# "பிரிவுபசாரப் பத்திரம்"

பொன்னும் பொருளும் பொங்கிக் கொழிக்கும்
பொலிந்து நின்றான் பொன்னடி போற்றி
நான்மறை நற்பொருள் நல்கிய மாறன்
நலமுடன் நல்லருள் தந்திடும் நகரில்
வானமும் நாணும் வண்மையில் மிக்க
வான்புகழ் வண்குலத் துதித்த இராம!
தானமும் தவமும் அணியெனக் கொண்டு
தண்டமிழ் ஆசான் பணிதனைச் செய்தீர்.

கல்வியிற் பெரியவர் கம்பராவார்; நம்
கண்முன் காண்பவர் இராம னாவார்
சொல்லினைக் காத்தவர் கோசல இராமன், நம்
பள்ளியைக் காத்தவர் பொன்னப்ப இராமன்
பல்பொருள் ஈந்தவர் பாரி ஆவார்
பார்ப்பவர் கண்முன் இராம னன்றோ!
நற்பொறை மிக்கவள் பூமி ஆவாள்
அவளையும் வெல்பவர் இராம னன்றோ!

அருந்தமிழ் ஆசான் ஆயினும் இராமன்
ஆங்கிலப் புலமையை அனைவரும் வியப்பர்
அரும்பொருட் செல்வர் ஆயினும் நண்பர்
அன்புடைப் பணிவை அகிலமே வியக்கும்
அருந்திறல் வீரர் ஆயினும் அன்பர்
அருளினை ஆன்றோர் என்றும் வியப்பர்
அரும்பெறல் நலமெலாம் அடைந்தவ ராயினும்
அன்னவர் பக்தியை ஆழ்வையே போற்றும்.

அன்பும் அறனும் ஆற்றலும் கொண்டு
அருட்பெருந் தன்மையால் ஈகையும் ஆற்றி
நன்மன வாய்மையால் நற்புகழ் ஈட்டி
நாடோறும் இல்லறம் நலமுடன் ஆற்றி
அன்புடன் ஒழுக்கமும் ஆழ்ந்த நல்லறிவும்
ஆற்றலும் மாணவர் அகத்தினில் பதிய
என்பெலாம் உருக அரும்பணி ஆற்றி
ஏடெலாம் போற்ற வாழ்பவர் இராமன்.

பள்ளியின் நலனைப் பாங்குடன் காப்பதில்
பார்த்தனைப் போன்று பணிதனைப் புரிந்தீர்
உள்ளமும் உருகிட ஓயாது உழைத்து
உத்தம மாணவர் உலகிற் களித்தீர்
தெள்ளத் தெளிவாய் நல்வழி காட்டி
எங்கள் உள்ளம் கொள்ளை கொண்டீர்
ஆக்கப் பணிக்கு அன்புரை வழங்கி
நிர்வாகத்தார் போற்றுதல் பெற்றீர்.

அண்ணல் இராமனின் கானகப் பிரிவு
அகிலமே கலங்கச் செய்தது முன்பு
**பொன்னப்ப இராமனின்** ஓய்வு கண்டு
பள்ளியே கலங்கி நிற்கிற தின்று
தன்னிகரில்லா நண்பரின் பிரிவால்
தவித்திடும் நமக்கு நல்வழி காட்ட
அந்தமில் ஆயுளும் ஆற்றலும் அவர்க்கு
அளித்திட ஆழ்வார் பொற்கழல் போற்றுவாம்.

இங்ஙனம்
தலைமை ஆசிரியரும்,
ஆசிரியர்களும், அலுவலர்களும்.
இந்து உயர்நிலைப் பள்ளி.

ஆழ்வார்திருநகரி
31- 3 - 77

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பொதுத்தனியன்கள்

மணவாளமாமுனிகள் தனியன். (அழகிய மணவாளன் அருளிச் செய்தது)

ஸ்ரீஶைலேஶ த$_3$யாபாத்ரம் தீ$_4$ப$_4$க்த்யாதி$_3$ கு$_3$ணார்ணவம் |
யதீந்த்$_3$ரப்ரவணம் வந்தே$_3$ ரம்யஜாமாதரம் முநிம் ||

குருபரம்பரையின் தனியன். (கூரத்தாழ்வான் அருளிச் செய்தது)

லக்ஷ்மீநாத$_2$ஸமாரம்பா$_4$ம் நாத$_2$யாமுநமத்$_4$யமாம் |
அஸ்மதா$_3$சார்யபர்யந்தாம் வந்தே$_3$ கு$_3$ருபரம்பராம் ||

எம்பெருமானார் தனியன். (கூரத்தாழ்வான் அருளிச் செய்தது)

யோ நித்யமச்யுத பதா$_3$ம்பு$_3$ஜயுக்$_3$மருக்ம –
வ்யாமோஹதஸ்ததி$_3$தராணி த்ருணாய மேநே |
அஸ்மத்$_3$கு$_3$ரோர் ப$_4$க$_3$வதோ ‧ ஸ்ய த$_3$யைகஸிந்தோ$_4$:
ராமநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்$_3$யே ||

நம்மாழ்வார் தனியன். (ஆளவந்தார் அருளிச் செய்தது)

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூ$_4$தி ::
ஸர்வம் யதே$_3$வ நியமேந மத$_3$ந்வயாநாம் |
ஆத்$_3$யஸ்ய ந : குலபதேர்வகுளாபி$_4$ராமம்
ஸ்ரீமத் தத$_3$ங்க்$_4$ரியுக$_3$ளம் ப்ரணமாமி மூர்த்$_4$நா ||

ஆழ்வார்கள் உடையவர் தனியன். (ஸ்ரீ பராசரபட்டர் அருளிச் செய்தது)

பூ$_4$தம் ஸரஶ்ச மஹதா$_3$ஹ்வய ப$_4$ட்டநாத$_2$
ஸ்ரீப$_4$க்திஸார குலஶேக$_2$ர யோகி$_3$ வாஹாந் |
ப$_4$க்தாங்க்$_4$ரிரேணு பரகால யதீந்த்$_2$ரமிஶ் ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோ ‧ ஸ்மி நித்யம் ||

# கண்ணிநுண் சிறுதாம்புத் தனியன்கள்

## நாதமுனிகள் அருளிச் செய்தவை

அவிதி$_3$தவிஷயாந்தரஶ்ஶட$_2$ாரே :
உபநிஷத$_3$ா முபகா$_3$நமாத்ரபே$_4$ாக$_3$: ।
அபி ச கு$_3$ணவஶாத்ததே$_3$கஶேஷீ
மது$_4$ரகவிர்ஹ்ருத$_3$யே மமாவிரஸ்து ।।

வேறொன்றும் நான்அறியேன் வேதம் தமிழ்செய்த*
மாறன்சடகோபன் வண்குருகூர் – ஏறு* எங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவியார்* எம்மை
ஆள்வா ரவரே யரண்

மதுரகவியாழ்வார் அருளிச்செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பு

◆◆கண்ணிநுண் சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில்
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்கும் அமுதூறும் என்னாவுக்கே.

◆◆பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் *
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் *
குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி ! *
முயல்கின்றேன் உன்தன்மொய்கழற்கன்பையே.

◆◆அன்பன் தன்னை அடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் *தென்குருகூர் நகர்நம்பிக்கு *
அன்பனாய் மதுரகவிசொன்னசொல் –
நம்புவார்பதி * வைகுந்தம் காண்மினே.

## திருவாய்மொழித் தனியன்கள்

(நாதமுனிகள் அருளிச்செய்தது)

ப$_4$க்தாம்ருதம் விஶ்வஜநாநு மோத$_3$நம்
ஸர்வார்த்த$_2$த$_3$ம் ஶ்ரீஶட$_2$கோபவாங்மயம் ||
ஸஹஸ்ரஶாகோ$_2$ப நிஷத் ஸமாக$_3$மம்
நமாம்யஹம் த்$_2$ராவிட$_3$ வேத$_3$ ஸாக$_3$ரம்

(ஈச்வரமுனிகள் அருளிச்செய்தது)

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் *
மருவினிய வண்பொருநலென்றும் * - அருமறைகள்
அந்தாதி செய்தானடியிணையே எப்பொழுதும்*
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.

(சொட்டை நம்பிகள் அருளிச்செய்தது)

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும் *
இனத்தாரையல்லா திறைஞ்சேன் * - தனத்தாலும்
ஏதும்குறைவிலேன் * எந்தைசடகோபன்
பாதங்கள் யாமுடையபற்று.

(அனந்தாழ்வான் அருளிச்செய்தது)

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் *
வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன் * - ஆய்ந்தபெருஞ்
சீரார்சடகோபன் செந்தமிழ் வேதம்தரிக்கும் *
பேராத வுள்ளம் பெற.

(பட்டர் அருளிச்செய்தது)

வான்திகழும்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் *
ஆன்றதமிழ்மறைளாயிரமும் * - ஈன்ற
முதல்தாய் சடகோபன் * மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமானுசன்.

மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் *
தக்கநெறியும் தடையாகித் * - தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன் *
யாழினிசை வேதத்தியல்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



பொலிந்துநின்ற பிரான் கண்டீர்! ஒன்றும்
பொய்யில்லை போற்றுமினே!



தேனறா மகிழ்த்தொடையலும் மவுலியும் திருக்கிளர் குழைக்காதும்
கானறாமலர்த் திருமுகச்சோதியும் கயிரவத் துவர்வாயும்
மோனமாகிய வடிவமும் மார்பமும் முத்திரைத் திருக்கையும்
ஞானதேசிகன் சரண தாமரையும் என்நயனம் விட்டகலாவே.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:; ஸ்ரீமதே பாலதந்வி மஹாகுரவே நம:;
ஸ்ரீமத் வரவரமுநயே நம:;

# பாசுரப்படி - திருவாய்மொழி

## [திருவாய்மொழி - பத்துப்பத்தின் பொருட்போக்கு]

## முதற் பத்து

**உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்**
**மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்**
**அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்**
**துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே.**

**உயர்வற உயர்நலமுடையவன்**
**வரன் முதலாய் அவை முழுதுண்ட பரபரன்**
**ஆய் நின்ற பரன்**
**வளவேழ் உலகின் முதலாய வானோர் இறை**
**வைப்பாம் மருந்தாம் நலத்தால் உயர்ந்து**
**உயர்ந்து அப்பாலவன்**

**அவையுள் தனிமுதல்**
**உம்பர் வானவர் ஆதியஞ்சோதி**
**அயர்வறும் அமரர்கள் அதிபதி** என்கிறபடியே
உயர்வற உயர்ந்த (பராத்பரனான) சர்வேசுவரன்

ஸ்வாமி நம்மாழ்வாருக்கு
**மயர்வற மதிநலம் அருளினன்** என்கிறபடியே
பக்தியாக வடிவெடுத்த ஞானத்தைக் கொடுத்து
**யானே என்னை அறியகிலாதே**
**யானே என்தனதே** என்கிற மயர்வற

இவர் மனத்தே மன்னினானாய்.
**சார்ந்த இருவல்வினைகளும் சரித்து மாயப்பற்றறுத்து**

தம்தாழ்ச்சி சொல்லி இவர் அகன்ற அளவிலும்
தன்சீல குணத்தைக்காட்டி இவரை மீட்டுத்
**தீர்ந்து தன்பால் மனம்வைக்கத்திருத்தி**

இப்படிச் செய்தும் இவர் மறப்பரோ என்பதினாலே
**மறக்கும் என்று செந்தாமரைக் கண்ணொடும்** என்றும்
**நல்கி என்னை விடான் நம்பியே** என்றும்
**மறப்பற என்னுள்ளே மன்னினான்** என்றும் சொல்லுகிறபடியே
அழகிய திருக்கண்களாலே நோக்கி
ஒருநாளும் மறக்க வொண்ணாதபடி –
இவருள்ளத்தில் சர்வேசுவரன் அசையாப்பொருள் போன்று நிற்க

ஆழ்வாரும்
ஐயம், திரிபு, மறதி இல்லாதபடி,
**யானே நீ என்னுடைமையும் நீயே** என்று
உணர்த்த உணர்ந்த
மெய்யான தத்துவ ஞானத்தை அடைந்தவராய்
**பெருநிலங்கடந்த நல்லடிப்போது அயர்ப்பிலன்!**
**தூய அமுதைப் பருகி என்மாயப்பிறவி**
**மயர்வறுத்தேனே!**
**எம்பிரானை என்சொல்லி மறப்பனோ?**
**மறப்பனோ இனி யான் என் மணியையே?**
என்று சொல்லும்படி
எம்பெருமானை மறவாத நிலைபெற்று

தாம்பெற்ற தத்துவஞான அநுபவத்தைத்
தம்நெஞ்சோடு பகிர்ந்து அநுபவிக்கக்கருதி –
நெஞ்சினை நோக்கி
**சுடரடி தொழுதெழென் மனனே**

**எம்பிரானைத் தொழாஅய் மட நெஞ்சமே**
**நெஞ்சமே நல்லை! நல்லை!**
**மலராள் மணவாளனைத் துஞ்சும்போதும் விடாது**
**தொடர்கண்டாய்**
**கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று**
**நீயும் நானும் இந்நேர் நிற்கில் மேல் மற்றோர் -**
**நோயும்சார்கொடான் நெஞ்சமே! சொன்னேன்**
என்கிறபடியே

எனக்கு அடங்கிய மனமே! நமக்கு உபகாரகனான எம்பெருமானின்
எல்லையில்லாத ஒளிவடிவான அவன் திருவடிகளில்
எக்காலத்தும் கைங்கர்யம் செய்து உய்வுபெறப்பாராய் !
இயல்பாகவே செய்யும் அவனுடைய அங்கீகாரத்தைப் பார்!
(நான்) " நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்று சொல்லி
அகலப்பார்த்தாலும்
திருமகள் கேள்வனை விடாதே காண்!
தொழச் சொல்லலாம்படியிருக்கிற நீயும்
தொழச் சொல்லுகிற நானும் இப்படியே நிற்கப்பெறில்
பலகாலமாக ஈட்டப்பெற்ற நல்வினை தீவினைகள்
இவ்வுலக வாழ்வில் ஈடுபாடு
வேறு பலன்களில் முயற்சி, வேறு உபாயங்களில் பற்று
முதலான குற்றங்கள் ஒன்றையும் சாரவொட்டான்
நெஞ்சமே! உனக்கு, மேலான இந்த அர்த்தத்தைச்
சொன்னேனென்று

தம் அநுபவத்தைத் தம்நெஞ்சோடு
அதனைத் துணையாக்கிப் பகிர்ந்து

இந்த பகவதநுபவம்
ஸம்ஸாரிகளுக்கும் ஆகவேணும் என்ற பெருநோக்காலே

விடத்தக்கவை – அவற்றின் தோஷம் – விடவேண்டிய முறை
பற்றத்தக்கது, அதன் குணம், அவ்விஷயத்தில் ஆன்மாவைச்
சமர்ப்பிக்கும் முறை,
அந்த சமர்ப்பண ரூபமான பஜனத்திற்கு
ஆலம்பன (பற்றுக்கோடான) மந்த்ரம் – இவற்றை உரைப்பாராய்

**வீடுமின் முற்றவும்**
பகவத் விஷய பஜன விரோதிகள் எல்லாம் முற்றவும்
விடத்தக்கன என்றும்
**மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள்**
விஷய போகங்களுக்குக் காரணமான சரீரங்கள்
விஷய போகங்கள் மின்னலைப் போன்று
சிறுமையுடையன, நிலையற்றன என்று அவற்றின்
தோஷமுரைத்தும்
**நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து**
பற்றறுதலே விடவேண்டிய முறை என்று உரைத்தும்
**வீடுடையான்** – உபயவிபூதி நாதன் – என்று
பற்றத்தகுந்தவன் ஸ்வரூபம் உரைத்தும்
**எல்லையில் அந்நலம்**
எல்லையற்ற கல்யாண குணங்களுடையவன் என்று
அவன் குணமுரைத்தும்
**வீடு செய்ம்மின், இறைசேர்மின், இறைபற்று**
**திண்கழல் சேர்** – என்று சேரும் முறை உரைத்தும்
**வண்புகழ் நாரணன்** என்று
சேர்க்கும் தன்மை வடிவான
பஜனத்திற்குப் பற்றுக் கோடான – மந்த்ர முரைத்தும்
(வீடுமின் முற்றவும் – என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தாராய்)

பற்றுக்கோடற்குரிய எம்பெருமான் குணங்களாக

**எளிவரும் இயல்வினன் நிலவரம்பில பல பிறப்பாய்** என்று

அவதாரமுகத்தாலே எளியன் என்றும்

**என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு?** என்று

குற்றங்கண்டாலும் கைவிடுபவன் அல்லன் என்றும்

**திசைகள் எல்லாம் திருவடியால் தாயோன்**

**தானோர் உருவனே** என்று

தன் சீல குணத்தால் எத்துணைத் தாழ்ந்தோருடனும்

புரையறக் கலக்கும் நீர்மையான் என்றும்

**புரிவதுவும் புகை பூவே** என்கிறபடியே

இட்டதுகொண்டு உகக்குமவன் ஆகையாலே

ஆராதனைக்கு எளியன் என்றும்

அவனைப் பற்றுதல் கடினமாக இருக்குமோ? என்று எண்ணாதபடி

**தூய அமுதைப் பருகிப் பருகி என் மாயப்பிறவி**

**மயர்வறுத்தேனே** என்கிறபடியே

அமுதமே ஔடதமும் ஆமாம்போலே

அவனைப் பற்றுகையே இனியதாய்ப்

பிறவி நோய்க்கு மருந்தாய் அமையும் என்றும்

அவன் **நீர்புரை வண்ணன்** ஆகையாலே

ஸம்ஸாரிகள் போன வழியே தனக்கு வழியாம்படி

அவர்கள் செவ்வைக்கேடே தனக்குச் செவ்வியாம்படி

பரிமாறு குணத்தன் என்றும்

**என்னுடைச் சூழலுளானே ..............என்னுடை**

**உச்சியுளானே** என்கிறபடியே

ஏககாலத்தில் பூர்ணாநுபவம் கொடுக்கையன்றியே

தமக்குப் படிப்படியாகத் தன்னை அநுபவிக்கக் கொடுத்தாற்போலே

பொறுக்கப் பொறுக்க அநுபவம் கொடுக்குமவன் என்றும்

**கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்**
**எண்ணிலும் வரும்** என்று
பரம பக்திக்கும் பரிகணனைக்கும் ஒக்கவந்து
முகங்காட்டுமவன் என்றும் எடுத்துச் சொல்லி

குணபூர்த்தியுடையவனைப்பற்றிய வணக்கமாகையாலே
**பத்துடை அடியவர்க்கு எளியவன்,**
**அமுதிலும் ஆற்ற இனியன்** என்கிறபடியே
எளியனாய் இனியனாய் இருக்கும் அவன் தன்மைபோலே
அவனைப்பற்றிய வணக்கமும்
எளியதுமாய் இனியதுமாய் இருக்குமென்று ஆர்வமூட்டி

**வழிநின்று வல்வினை மாள்வித்து அழிவின்றி**
**ஆக்கம் தரும்,**
**தரும் அரும் பயனாய** என்று தொழுதலின் பயன் சொல்லி
வினைகள் தடையானால்? என்னில்
வணங்கத் தொடங்கின அளவிலேயே
**நாளும் நின்று அடு நம பழமைஅம் கொடுவினை**
**உடனே மாளும்** என்று – அச்சம் போக்கி

அவனைத் தொழும் வழி என்? என்னில்
**பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி உரைத்த**
**கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதியம் பகவன்**
**வணக்குடைத் தவநெறி வழிநின்று புறநெறிகளைகட்டு**
**உணக்குமின் பசையற அவனுடை உணர்வு**
**கொண்டுணர்ந்தே** என்கிறபடியே
ஸ்ரீ கிருஷ்ணன் தேர்த்தட்டிலே உரைத்தபடியே
**ப₄க்த்யாத்வநந்யயா ஶக்ய அஹமேவம் விதோ₄ர்ஜுன ।**
**ஜ்ஞாதும் த்₃ரஷ்டும்ச தத்வேந ப்ரவேஷ்டும்ச பரந்தப ॥**

**மந்மநா பூவ மத்பூக்த: மத்₃யாஜீ மாம் நமஸ்குரு।**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண:॥**

என்கிறபடியே

அசையாத ப்ரீதி பூர்வக பக்திமார்க்கமே தொழும் வழி என்று வழியும் காட்டி

அவ்வழி நின்று

**நன்றெழில் நாரணன் நான்முகன் அரன் என்னுமிவரை**
**ஒன்ற நும் மனத்து வைத்து உள்ளி** என்கிறபடியே

நடுநிலையராய்–மனத்தை விவேகத்தால் பரிசுத்தப்படுத்தி ஆராய
ஶ்ரீமந்நாராயணப் பரத்வமே தோற்றுமதினாலே

**நும் இருபசையறுத்து**

மற்ற தேவதைகளின் பக்கல் ஈசுவர புத்தியையும் பற்றுதலையும் ஒழித்து

**மனனக மலமறக் கழுவி**

மும்மூர்த்திகளும் சமமாவர் என்கிற
விப்ரதி பத்தியாகிய அழுக்கும் ஒழியும்படி
மனத்தை விவேகத்தால் பரிசுத்தப்படுத்தி

**அவனுடை உணர்வு கொண்டு உணர்ந்து**

(அவன் விஷயமான ஞானம் கொண்டு)

**நாளும் நம் திருவுடை அடிகள் நலங்கழல் வணங்கி**
**நன்றென நலம் செய்வது அவனிடை** – என்கிறபடியே

வேறொரு பயனைக் கருதாமல் – அவனையே வேண்டிப்
பக்தியைப் பண்ணுங்கோள் என்று
தமக்கு எம்பெருமான் பரம க்ருபையாலே மயர்வற மதிநலமருளி
பகவத் பஜனத்தில் மூட்டினாப் போலே
ஸம்ஸாரிகளுக்கும் ஆழ்வார் தம் பரமக்ருபையாலே
தத்வம், ஹிதம், புருஷார்த்தம் பற்றிய
அஜ்ஞானத்தைப் போக்கி, ஜ்ஞானபக்திகளை உபதேசித்து
பகவத் பஜனத்தில் மூட்டுகிறார் முதல்பத்தில்.

# காதலிக்க - நெஞ்சே! நினை -1

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-முதல்பத்து சாரம்)

**பிறவியற நீள்விசும்பில் பேரின்பம் உய்க்கும்**
**திறமளிக்கும்**(1) **சீலத்திருமால் அருளிய மதிநலத்தால்**
**காரிமாறன்சேய் மகிழ்மாறன் குருகூர்ச் சடகோபன்**
**உயர்வேதம் நேர்கொண்டு உயர்வே பரன்படியை**
**உள்ளதெல்லாம் தான்கண்டு மயர்வு**(2) **அடியறவே**
**இடையிடையே வளமிக்க மால்பெருமை**
மன்னுயிரின் தண்மை உளமுற்று அங்கூடுருவ -
**ஓர்ந்து தளர்வுற்று நீங்கநினை மாறனை-மால்**
**நீடிலகு தன்சீலத் திறங்காட்டித் தன்பால்**
**பாங்குடனே சேர்த்திடவே-மாறனும் தம்மைப்போல் -**
**மயர்வேதும் வாராமல் மானுடரை வாழ்விக்க**
**பரன்படியை**(3) **உள்ளபடி தெளியாக் காட்டிடவே**
**பத்துடையோர்க்**(4) **கென்றும் பரனெளியனாம்**
**பிறப்பால்**(5)
**முத்திதரும் திறலுடையோன்; பரிவதில் ஈசன்**

ஆராதனைக்கு அரியனலன்; பற்றுமவர்க்கு அறவினியன்(6)
**ஓடுமனம் செய்கையுரை யொன்றில்லா தாருடனே-ஓர்**
**ஏதுமறத்**(7) **தன்னைத்தரும்;அடிமை**(8) **கொள்ளும்**
**இங்ஙனமே அவன்குண மறிந்தோர் தம்மளவில்**
**ஈசன் உவந்தாற்ற**(9) அவயவங்கள் தோறும் -
அணையும்,(10) **(இச்)சுவையதனைப் பெற்றிடவே**
**வீடுசெய்து**(11)

---

1. அநுக்ரஹவல்லமை 2.அஞ்ஞானம் 3.பரமனின் ஸ்வரூபஸ்வபாவம் 4. பக்திசெய் வோர்க்கு 5. அவதாரத்தால் 6. ஆச்ரயண போக்யன் 7. காரணம் பற்றாமல் 8.கைங்கர்யம் 9.ஆற்ற-ஏற்கும் திறமறிந்து மெதுவாக மெதுவாக 10. தன்னை அநுபவிக்கக் கொடுக்கும் 11. பற்றுக்களை விட்டு

**மற்றெவையும்; மிக்கபுகழ் நாரணன் தாள்**
**நாடு**(12) **நலத்தால்**(13) **அடைய நன்குரைக்கும்**
**மாறன் பண்புடனே பாடியருள் இப்பத்தை**
**நாள்தோறும் சிந்திப்பார் மனமாசறவே**
**மாறனடி பணிய நாரணனும் போற்றுவனே-ஆதலினால்**
**மாறனை நீ தாள்தொழுது காதலிக்க-நெஞ்சே! நினை.**

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

12. உலகோர் 13. பக்திசெய்து

# இரண்டாம் பத்து

**சோராத எப்பொருட்கும் ஆதியாஞ்சோதி**
**மூவாத் தனி முதல்**
**எப்பொருட்கும் வேர் முதல் வித்தாய்**
**பொருளென்று இவ்வுலகம் படைத்தவன்** என்கிறபடியே
சித், அசித் த்ரயத்துக்கும் த்ரிவித காரணங்கள் தானேயான
சர்வேசுவரன்
[த்ரயம் – மூன்று ; சித்த்ரயம் – நித்யர், முக்தர், பத்தர்
அசித்ரயம் – ப்ராக்ருதம், அப்ராக்ருதம், காலம்
த்ரிவிதகாரணம், முதற், துணை, நிமித்த காரணங்கள்.]
**என்னைப்பெற்ற அத்தாயாய்த் தந்தையாய்**
**அறியாதன அறிவித்த அத்தா** என்று சொல்லும்படி
தத்வ ஹித புருஷார்த்தங்களை
ஆழ்வாருக்குத் தெளிவாய் அறிவிக்க – ஆழ்வாரும்
**அறியா மாமயத்து அடியேனை**

**அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண்**
**அன்பு செய்வித்து வைத்தாய்** - என்று.
**அடியை அடைந்து உள்ளந்தேறி**
**மருவித்தொழும் தூமனத்தனனாய்**
மருளில் வண்சடகோபன் என்று கொண்டாடும்படி ஆகி
அப்படி - அந்தக்கரணத் தூய்மைவழிப் பெற்ற
ஞானத்திற்குப் பயனான மோக்ஷத்தை
**களிப்பும் கவர்வுமற்றுப் பிறப்பு பிணிமூப்பு இறப்பற்று**
**ஒளிக்கொண்ட சோதியமாய்** என்கிறபடியே
இவ்வுலக லாப நஷ்டங்களால் வரும்
அல்ப சந்தோஷத்திற்கும் மனக்கவலைக்கு மிடமான
சரீர சம்பந்தம் போய் - ஶுத்தஸத்வமான
எல்லையில்லாத ஒளிவடிவான சரீரத்தைப்பெற்று
**அடியார் குழாங்களை உடன்கூடுவது என்றுகொலோ!**
நித்யஸூரிகளோடு கூடப்பெறுதலே என்று அறுதியிட்டு
அந்த மோக்ஷத்தை ஆசையாலே தேடி
அது உடனே கிடைக்கப் பெறாமையாலே
**வாடிவாடும் இவ்வாணுதல்** என்று வாட - எம்பெருமானும்

**வேவாரா வேட்கை நோய் மெல்லாவி உள்உலர்த்த;**
**உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து** என்று சொல்லும்படியான
உலர்ந்து போகைக்கு ஈடான ஆழ்வாரின் தாபம் அறும்படி
**அந்தாமத்தன்பு செய்து**
(பரமபதத்தில் செய்யும் அன்பினை இவரிடத்திலே செய்து)
இவரோடே உள்கலந்து
**சிறிதோரிடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுகள்**
**ஒக்கவே விழுங்கி**
**சிக்கெனப் புகுந்தான்** என்கிறபடியே
செருப்பு வைத்துத் திருவடி தொழப்புக்காப் போலே ஆகாமல்
ராஜாக்கள் நாட்கணக்கு அற்றபின்பு அந்தப்புரத்தில் புகுமாப்போலே
ஜகத் ரக்ஷணத்திற்கு வேணும் ஸம்விதானமெல்லாம் பண்ணி

ஆழ்வார் ஒருவரையே அநந்யபரனாய் அநுபவித்துக் கொண்டு
இனிப்போராதபடி இவருள்ளத்திலே புகுந்து நிற்க – ஆழ்வாரும்

**செடியார் நோய்கள் எல்லாம் துறந்து**
**எமர் கீழ் மேல் எழுபிறப்பும்**
**விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினரே** என்று
தமரோடும் தாம் பெற்ற வாழ்ச்சியைச் சொல்லி
**கேசவன் தமர் கீழ்மேல் எமர் ஏழேழு பிறப்பும்**
**மாசதீர் இதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா**
என்கிறபடியே
ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ ஊற்றறுக்கண் மாறாதே பெருகுவதே! என்றும்
**எனக்கே அருள்கள்செய்ய விதிசூழ்ந்ததால்** என்கிறபடியே
நிர்ஹேதுக க்ருபையாகிற பெருஞ்சதிரைப் பெற்றனரே என்றும்
அவ்வாழ்ச்சிக்கு இவர் தாமே ஆச்சர்யப்படும்படியாகி

இப்படி – தம் சம்பந்திகள் அளவும் வெள்ளமிடுகிற ப்ரீதியாலே
தமக்கு அவன் –
**நீந்தும் துயரில்வீட்டை; கெடலில்வீட்டை;**
**எம்மாவீட்டைக் கொடுக்கத் தேட**

தமக்கு அவன் ப்ரீதியாலே கொடுக்கத் தேடுகிற மோக்ஷம்
"தனக்கு" என்று தரில்
அங்ஙனம் தருகின்ற மோக்ஷம்
அஹங்காரத்தை உட்கொண்டது ஆகையாலே
செல்வம் முதலியவற்றைப்போன்று
தம் ஸ்வரூபத்திற்கு விரோதம் என்று கருதியவராய்

**கைம்மா ! துன்பம் கடிந்த பிரானே!**
**எம்மா வீட்டுத் திறமும் செப்பம்,**
(பிற விலக்ஷணமான மோக்ஷத்தை நினையோம்)
**நின் செம்மா பாத பற்பு தலைசேர்த்தி** என்று அவன் திருவடிகளைத் தம் சென்னியில் சேர்த்தலையே
**நீந்தும் துயரில்வீடாக, கெடலில்வீடாக, எம்மாவீடாக தனக்கேயாக எனைக்கொள்ளு மீதே** என்கிறபடியே அவனுடைய ருசிக்கும் தம்முடைய சேஷத்வத்திற்கும் சேர அறுதியிட்டு
**அடியேன் வேண்டுவது ஈதே** என்று
அதனையே தரப் ப்ரார்த்திப்பாராய்

அப்பெருமானுக்குரிய பரத்வத்தை
மேலும் நிலைநாட்ட வேண்டி
**திண்ணன் வீடு முதல் முழுதுமாய்** என்று மோக்ஷம் முதலிய பயன்கள் எல்லாம் கொடுக்கிறவன் ஆதலையும்
**மிகும் தேவும் எப்பொருளும் படைக்கத் தகும்,**
**கருத்தில் தேவும் எல்லாப்பொருளும் வருத்தித்த,**
**தன் உந்தியுள் வாய்த்த திசைமுகன் இந்திரன்**
**வானவர் ஆக்கினான் தெய்வவுலகுகளே** என்கிறபடியே
எல்லாவற்றிற்கும் காரணன் ஆதலையும்
"**திண்ணன் வீட்டாலே**" வெளியிட்டும்

**அணைவது அரவணைமேல்** என்று
ஆதிசேஷசயனன் ஆதலையும்
**பூம்பாவை ஆகம் புணர்வது** என்று
திருமகள் கேள்வன் ஆதலையும் (ஶ்ரிய : பதித்வம்)
**இணைவனாம் எப்பொருட்கும்** என்று
அவதரித்து எளியனாதலையும்
**வீடு முதலாம்** என்று மோக்ஷம் தருமவன் ஆதலையும்
**புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே** என்று

வீடுபேற்றிற்கு உபாயமாம் தன்மையையும்
ஆனை இடர்கடிந்து என்று
ஆபத்தில் உதவும் தன்மையையும்
மூவுலகுங் காவலோன் என்று
எல்லோரையும் காத்தளிக்கும் தன்மையையும்
நலமந்தம் இல்லதோர் நாடு புகுவீர்!
பலமுந்து சீரில்படிமின் ஓவாதே என்று
முமுக்ஷுக்களால் உபாசிக்கப்படுகிறவன் ஆதலையும்
"அணைவது அரவணையாலே" வெளியிட்டும்

"கள்வா! எம்மையும் ஏழுலகும் நின் -
னுள்ளே தோற்றிய இறைவா!" என்று
வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்
புள்ளூர்தி கழல் பணிந்து ஏத்துவரே என்கிற
மற்றைத் தேவர்களுடைய வார்த்தையாலும்
தீர்த்தன் உலகளந்த திருவடிமேல் பூந்தாமம் சேர்த்தி
அவையே சிவன் முடிமேல் தான் கண்டு
பார்த்தன் தெளிந்தபடியை ப்ரத்யக்ஷம் காட்டியும்
அவனே பராத்பரன் என்று தெரிவித்து

புலனைந்து மேயும் பொறி ஐந்தும் நீங்கி என்று
ஐங்கருவி விளைக்கும் எல்லையில்லாத ஸம்ஸார துக்கம் சொல்லி
அது விடத்தக்கது என்றும்
நலமந்த மில்லதோர் நாடு புகுவீர் என்று
அளவிடமுடியாத மோக்ஷ ஆனந்தம் சொல்லி
அதுவே பெறத்தக்கது என்றும் வலியுறுத்தி
தஸ்மிந் யதந்த$_3$ஸ் ததுபாஸிதவ்யம்
அந்தப் பரம்பொருளிடத்து எந்தகுண முளதோ

அது உபாஸிக்கத் தக்கதாம் – என்பதாலே
**அலமந்து வீய அசுரரைச் செற்றான்**
**பலமுந்து சீரின் படிமின் ஓவாதே** என்கிறபடியே
சொல்லும் நிலையிலும் பேறுபோல இனிமையாக இருக்கும்
பகவானின் கல்யாண குணங்களைச் சொல்ல
ஆசையுடையவர் ஆகுங்கோள் என்று
மோக்ஷம்பெற ரஸகனமான வழியும் காட்டி

**சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது**
**திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது**
**வல்வினை மூழ்காது, நரகமுந்தாதே,**
**கீழ்மை செய்யாதே, வலங்கழியாதே,**
**சூதென்று களவும் சூதும் செய்யாதே**
**கிளரொளி இளமை கெடுவதன் முன்னம்**
**மாலிருஞ்சோலை சார்வது சதிரே**–திவ்யதேச வாசமென்ன
**மாலிருஞ்சோலை பதியது ஏத்தி**–திவ்யதேச சங்கீர்த்தனமென்ன
**மாலிருஞ்சோலை தொழுக் கருதுவதே**–திவ்யதேச அஞ்சலி என்ன
**மாலிருஞ்சோலை வலம் செய்து**–திவ்யதேசப்ப்ரதக்ஷணமென்ன
**மாலிருஞ்சோலை நெறிபட அதுவே**–திவ்யதேச யாத்திரையென்ன
**மாலிருஞ்சோலை நினைவது நலமே**–திவ்யதேசச் சிந்தனமென்ன
இவற்றிலே நெஞ்சைச் செலுத்தி
விஷயாந்தரப் ப்ராவண்யத்திலே நெஞ்சு பறிபோகாமல்
(பரமனைத் தவிர்த்த விஷயங்களில் ஈடுபடாமல்)
நன்னெறிப்பட்ட நெஞ்சினராய்
பரப்ரம்ம ஸ்வரூபத்திற்குள் இருக்கும்
**அபஹதபாப்மத்வம்** – பாபங்கள் இல்லாத தன்மை –
முதலான குணங்களோடு கூடிய ஸகுணப்ரஹ்ம வழிபாட்டினை

அங்கங்களோடு விதிக்கிறார் இரண்டாம் பத்தில்

## காதலிக்க - நெஞ்சே! நினை -2

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-இரண்டாம்பத்து சாரம்)

**வாயும்**(1) **திருமால் மறைய நிற்க**
**ஆற்றாமை போய்விஞ்சி மிக்க புலம்புதலாய்**(2)
**ஆய**(3) அறியாதவற்றோடு அணைந்தழுத(4) **மாறன்**
**திருமால் பரத்துவத்தை அவதாரத்தே**(5) **நன்குரைக்க**
**மாலும்தான் ஊனமறவே வந்து உள்கலக்க**
**உள்கலந்த மாலினிமை அநுபவத்திற்கு ஆம்துணையா**
வானிலடியார் குழாஅம்(6) **கூட ஆசையுற**
**கூடியின்பம் எய்தாக் குறையதானல் வாடிமிக**
**அன்புற்றார் தம்நிலைமை ஆய்ந்துரைக்க மோஹித்து**
**அந்தாமத் தன்பால் அடியார்களோ டிறைவன்**
**வந்தாரத் தான் கலந்த வண்மையினால்**
**சந்தாபம்**(7) **தீர்ந்த சடகோபன் - தன்பால்**
**செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்த வைகுந்தன்**
**நைகின்ற தன்மைதனைத் தான்கண்டு-மாறனுமே**
**" உன்னை நான் விடேன்" என்றுரைக்க**
வன்மை யடைந்தான்(8) **கேசவனே-கேசவனால்**
"எந்தமர்கள் கீழ்மேல் எழுபிறப்பும்(9)

---

1. அடைதற்கு எளிய 2.புலம்பியவராகி 3.ஆராய்ந்து 4.அறியவியலாத ஜடப்பொருளோடு கட்டிக்கொண்டு அழுத 5. அவதாரத்தின்கண்பரத்வம் 6. நித்யஸூரிகள் 7. வருத்தம் 8. தரிப்புற்றான் 9. தமக்குக் கீழும் மேலும் உள்ள ஏழுபிறவிச் சுற்றத்தினர்

தேசடைந்தார்" என்றவன்தன் கருணைத் திறமுரைத்து
அணைந்தவர் தம்முடனே(10) ஆயனருட் காளாம்
குணம்தனையே கொண்டு அவனுடனே உலகையே(11)
கூட்ட
இணங்கிமிக மாசில் உபதேசம்செய் மாறனுக்கு
எம்மா வீடுதர ஓர்ந்தானாய் நின்ற மாலுக்கு
எம்மாவீடும் வேண்டா என்றனுக்கு உன்தாளிணையே
எம்மாவீடாம் அம்மா! அமையுமென ஆய்ந்துரைத்து
கிளரொளிசேர் கீழுரைத்த பேறு பெற்றிடவே -
வளரொளிமால் சோலை மலைக்கே தளர்வறவே
நெஞ்சை வைத்துச் சேரப் பணித்த
மாறனை நீ தாள்தொழுது காதலிக்க-நெஞ்சே! நினை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

10. தம்மோடு ஸம்பந்தம் பெற்றோருடன் 11. சம்சாரிகளையும்

## மூன்றாம் பத்து

முழுதுமாய் முழுதியன்றாய்
ஏழ்ச்சிக் கேடின்றி எங்ஙனும் நிறைந்த எந்தாய்
எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவற நிறைந்து நின்ற
அளவுடை ஐம்புலன்கள் அறியாவகையால்
அருவாகி நிற்கும்
என்று சொல்லுகிறபடியே எல்லா வகையாலும்
அளவிட்டுக் கூறமுடியாதபடி எங்கும் பரந்து
யாவையும் எவரும்தானாய் அவரவர் சமயந்தோறும்
தோய்விலன் உணர்வின் மூர்த்தி என்கிறபடியே
தான்பரந்துநிற்கும் சேதநா சேதனங்களுடைய குற்றம் ஒன்றும்
தன்னைத் தீண்டப் பெறாதவனாய்
எங்கும் பரந்து நிற்கும் சர்வேசுவரன்

தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்தி
சன்ம சன்மாந்திரம் காத்து
அடியார்களைக் கொண்டு போய்த்
தன்மை பெறுத்தித்
தன் தாளிணைக் கீழ்க் கொள்ளும் அப்பனாய் விளங்கும்
சேஷியான அவன்தன் வள்ளல் தன்மைக்கும்

அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன் -
பன்மாமாயப் பல்பிறவியில் படிகின்ற யான் -
பொல்லா யாக்கையின் புணர்வினை அறுக்கலறா
வினையியல் பிறப்பு அழுந்தி
கொடுவினைத் தூற்றுள் நின்று

பாவியேன் பலகாலம் வழிதிகைத்து -
அலமருகின்றேன் என்று அரற்றி

தொன்மா வல்வினைத்தொடர்களை முதல் அரிந்து
எந்நாள் யானுன்னை இனிவந்து கூடுவன்?
யானுன்னை எங்கு வந்து அணுகிற்பன்?
உலகமெல்லாம் தாவிய அம்மானை
எங்கினித் தலைப்பெய்வன்? என்று
சரீர ஸம்பந்தத்திற்கு நொந்து

அதில் உண்டான அருசியோடே காயம் கழித்து,
அவன் தாளிணைக் கீழ்ப் புகும் காதலன் ஆன
ஆழ்வாருடைய ஆசைக்கும் சேர

வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்,
வீடும் தரும் நின்று நின்றே என்று
எம்பெருமான் மோக்ஷத்தைக் காட்டிக்கொடுக்க

அறுதியிட்ட அந்த மோக்ஷத்திற்குப் பலன்
ஊனமில் மோக்கமென்கோ! என்கிறபடியே
பகவதநுபவ கைங்கர்யங்களாதலாலே
முடிச் சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ
அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ
படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ திருமாலே! கட்டுரையே என்று
அவனுடைய வடிவழகையும் ஆபரணச் சேர்த்தியையும்
அநுபவித்து

அதனை அளவுக்குட்படுத்தி அநுபவிக்க முடியாமையாலே
ப்ரக்ருதி சம்பந்தங் காரணமாக
தம்முடைய கரணங்களின் செயல்பாட்டுக் குறைவே
அதற்குக் காரணம் என்று ஆழ்வார் சோகிக்க – ஆழ்வீர்!
நம்முடைய அழகு முதலியன அளவிட முடியாதன;அவற்றைப்
பரிச்சேதித்து அநுபவிக்க முடியாமைக்குக் காரணம்
உம்முடைய கரணங்களின் குறையன்று
இந்நிலை நித்ய முக்தர்களுக்கும் உண்டு என்ன

சர்வதா பகவத் சிந்தனபரராய் பகவதநுபவத்தாலே
மகிழ்வுற்ற ஆழ்வார்
**நிலைபெற்று என் நெஞ்சம் பெற்றது நீடுயிரே** என்று
இயல்பாகவே நித்யமான ஆத்மவஸ்து
இப்பொழுதுதான் நித்யத்வம்பெற்றதாம்போலே தரிப்புற்றவராய்

**பெற்றது நீடுயிரே** என்று சொல்லிவிட்டாலும் – அது
கைங்கர்யம் பண்ணியே பலிக்கவேண்டுமாகையாலே
**ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமைசெய்ய வேண்டும்** என்று ஆசைப்பட
அவர் ஒழிவில் கைங்கர்யப் பாரிப்புக்குச் சேர எம்பெருமான்
எங்கும் நிற்கின்ற தம் நிலையைக் [**ஸர்வாத்ம பா$_4$வம்**]
காட்டிக்கொடுக்க

அதுகண்டு ஆழ்வாரும்
**புகழும்நல் ஒருவன்என்கோ! பொருவில்சீர்ப் பூமிஎன்கோ!**
**குன்றங்கள் அனைத்துமென்கோ! சாதி மாணிக்கமென்கோ!**
**சவிகொள்பொன் முத்தமென்கோ! நளிர்மதிச்**
**சடையனென்கோ!**

நான்முகக் கடவுளென்கோ! என்கிறபடியே எம்பெருமானுடைய ஸர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து பேசிப் ப்ரீதராய்

இந்தப்ப்ரீதி
**எம்மானைச் சொல்லிப்பாடி**
**பண்கள் தலைக்கொள்ளப்பாடி**
**முனிவின்றி ஏத்தி**
**பேர்பல சொல்லிப் பிதற்றி** என்றும்
**எழுந்தும் பறந்தும் துள்ளாதார்**
**ஏத்திக் குனிப்பார்**
**தடுகுட்டமாய்ப் பறவாதார்**
**கும்பிடு நட்டமிட்டாடி**
**உலகோர் சிரிக்க நின்றாடி** என்றும்
**நெஞ்சம் குழைந்து நையாதே** என்றும் சொல்லுகிறபடியே
மனோ வாக் காயங்களின் செயல்களாலே களிக்கும்படி
"**மொய்மாம்பூம்பொழிலில்**" தலைமண்டியிட்டுச் செல்ல

இப் ப்ரீதியானது – கீழ்
**அடியார் குழாங்களை**
**உடன் கூடுவது என்று கொலோ?** என்று
ப்ரார்த்தித்த பேற்றின் அளவோடு நில்லாமல்
**அடியார் அடியார் தம்மடியாரடியார் தமக்**
**கடியாரடியார் தம்மடியார் அடியோங்களே** என்று
அடிமையில் எல்லை நிலத்திலே நின்றவர்கள் அளவும் வளர

ஆக இப்படியே
பாகவத சேஷத்வ எல்லை நிலத்திலே ஊன்றிய ஆழ்வார்

அந்த பாகவதர்களுக்கு விசேஷணமிடுகிற அடைவிலே
ப்ரஸ்துதமான பகவத் ஸௌந்தர்ய சீலாதிகள்
பாகவத தாஸ்ய ரஸத்தையே மறக்கச் செய்ய

சக்ஷுஶ்ரவா: என்று பெயர்பெற்ற திருவனந்தாழ்வான்
ஒருகரணத்தாலே மற்றொருகரணத்தின்செயலைக் கொள்ளுமாறுபோல
**நெஞ்சமே நீள்நகராக இருந்த என்தஞ்சனே**
**என்னும் எப்போதும் என் வாசகமே** என்று
மனத்தின் செயலை வாக்கும்
**வாசகமேஏத்த அருள்செய்யும் வானவர்தம் நாயகனே**
**என்று தடவும் என் கைகளே** என்று
வாக்கின் செயலைக் கைகளும்
**கைகளால் ஆரத்தொழுது தொழுது உன்னை**
**மெய்கொள்ளக்காணவிரும்பும் என் கண்களே** என்று
கைகளின் செயலைக் கண்களும்
**கண்களால் காண வருங்கொல் என்று ஆசையால்**
**திண்கொள்ள ஓர்க்கும் கிடந்து என் செவிகளே** என்று
கண்களின் செயலைக் காதுகளும் செய்ய ஆசைப்படும்படி -
இந்திரியங்கள் **ஒன்று ஒன்றின் செயல் விரும்ப**
**உள்ளதெல்லாம் தான் விரும்பும்படி**
அவனை அநுபவிக்கவேண்டும்படியான
பெருவிடாயை உடையராய்

**அஹம் ச்லோகக்ருத் ; அஹம் ச்லோகக்ருத்**
என்ற உபநிஷத் வாக்கின்படி
**வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்**
**ஒன்றியொன்றி உலகம் படைத்தான் கவியாயினேற்கு**

மற்றொருவர் கவி ஏற்குமே?
என்னாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்
என்று தம் நிலையை அருளிச் செய்தவராய்

நன்மையுடையவன் சீர் பரவப்பெற்ற நானோர் குறைவிலனே
நின்றபுகழ்ஏத்தியும் பாடியும்ஆடியும் யானோர் முட்டிலனே
மட்டவிழ் தண்ணந்துழாய் முடியானை வணங்கி
அவன் திறத்துப்பட்ட பின்னை -
இறையாகிலும் என் மனத்துப் பரிவிலனே
அரியினை அச்சுதனைப்பற்றி யான் இறையேனும் இடரிலனே
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை
உடலொடும் கொண்டு கொடுத்தவனைப் பற்றி என்றும் துயரிலனே
துயரமில் சீர்க்கண்ணன் மாயன் புகழ்துற்ற யானோர் துன்பமிலனே
இன்புறும் விளையாட்டுடையானைப் பெற்று ஏதும் அல்லலிலனே
எல்லையில் மாயனைக் கண்ணனைத் தாள்பற்றி யானோர் துக்கமிலனே
ஒக்க ஒடுங்க விழுங்க வல்லானைப் பெற்று என்றும் தளர்விலனே
கிளரொளி மாயனைக் கண்ணனைத் தாள்பற்றி
யானொன்றும் கேடிலனே என்று - அவனை
வகுத்த சேஷி என்றும், குணக்கடல் என்றும், ஸங்கல்ப ஶக்தன் என்றும்

அகடிதகடநா ஸமர்த்தன் என்றும்
தன் வ்யாபகத்தாலும், அவதாரத்தாலும்
அனைவரையும் காக்குமவன் என்றும் அறிந்து
இதுவும் அவனுடைய லீலா விபூதியே என்று உணர்ந்து
ருசி முன்பாக அவனுடைய குணங்களை
நெருங்க இங்கேயே அநுபவிக்கையாலே
இந்த உலகத்தில் சேர்ந்திருத்தலாகிற துக்கமோ
'பூர்ணாநுபவம் செய்யக்கூடிய தேசத்தில் போகப் பெற்றிலேன்'
என்கிற துக்கமோ சிறிதும் இல்லாதவராய்
மீண்டும் வருதல் இல்லாத முக்தர்கள்
பகவதநுபவம் பண்ணி ஆனந்தக் கடலில் மூழ்குமாப் போலே -
ஆனந்தக் கடலில் மூழ்கின ஆழ்வார்

**செய்ய தாமரைக் கண்ணனாய்**
**எஞ்சலில் அமரர் குலமுதலாய்**
**மூவர் தம்முள்ளும் ஆதியாய்**
ஞானத்தெளிவுடைய நித்ய ஸூரிகளுக்குப்
பரத்வம் காட்டி நிற்கும் அவனை
ஸம்சாரிகளான நாம் நெருங்கப் போமோ? என்று
அஞ்சும் சம்சாரிகள் அச்சம் தீர

**கீழ்-பத்துடையடியவரில் எளிவரும் இயல்வினனாயும்**
**அணைவது அரவணையில்**
**இணைவனாம் எப்பொருட்குமாயும்**
காட்டிநின்ற அவதார எளிமை - எளிமையன்று
அது பரத்வமாம் என்னும்படி

**யே யதா₂மாம் ப்ரபத்₃யந்தே தாந் ததை₂வ ப₄ஜாம்யஹம்**
என்கிறபடியே
அடியவரிட்டபடி தான் என்கிற அவன் திருவுளத்திற்குச் சேரவும்
**அர்ச்சயஸ் ஸர்வஸஹிஷ்ணு: அர்ச்சக பராதீந
அகிலாத்மஸ்திதி:**
'அர்ச்சகரிட்ட வழக்காம்படி தான்'என்கிற
அவன் நீர்மைக்குச் சேரவும்
**நெஞ்சினால் நினைப்பான் யவன்
அவனாகும் நீள்கடல் வண்ணனே** என்கிறபடியே
அடியவர்கோலின திருமேனியையே
தன் அஸாதாரண விக்ரஹம் எனக்கொண்டு
எழுந்தருளியிருக்கிற எளிமையின் எல்லை நிலமான
அர்ச்சாவதாரத்தை எடுத்துச் சொல்லி

**போம் வழியைத் தரும் நங்கள் வானவர் ஈசன்நிற்க
இழியக் கருதியோர் மானிடம் பாடல் என்னாவதே** என்று
ஸ்வரூப நிறம் தராத பயன் விளைக்காத நரஸ்துதி பண்ணி
உறுப்புக்களைப் பாழ்போக்காதே - வாய்படைத்ததன் பயன்
**'வள்ளல் மணிவண்ணன் தன்னைக்
கவி சொல்ல வம்மின்'** என்றழைத்து
எம்பெருமானைப் பாடினாலோ
**வேண்டிற்றெல்லாம் தரும்
தன்னாகவேகொண்டு சன்மம் செய்யாமையும் செய்யுமே
வழியைத் தரும் நங்கள் வானவரீசனே** என்கிறபடியே
நன்மையின் எல்லை நிலமான முக்த ஐச்வர்யம் வரை பெறலாம்
என்று சொல்லி

ஸேவா ச்வவ்ருத்திராக்$_2$யாதா தஸ்மாத்தாம்
பரிவர்ஜயேத் என்கிற
மநுமஹர்ஷியின் வாக்கின்படி
அப்ராப்ய (வகுக்காத) விஷயத்தில் பணியை மாற்றி
வகுத்த ஈசுவரன் விஷயத்தில்
**புகழும் நல்லொருவன் என்கோ வில்**
தாம் வாசிக கைங்கர்யம் செய்தமை போன்று – ஸம்ஸாரிகளையும்
அவன் விஷயமான வாசிக கைங்கர்யம் செய்யும்படி
ஸ்வரூபம் நிறம் பெறத்தக்க
(ஸ்வரூபத்திற்கு நன்மை விளைவிக்கத் தக்க)
செயலில் மூட்டுகிறார் மூன்றாம் பத்தில்

## காதலிக்க – நெஞ்சே! நினை –3

**(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-மூன்றாம்பத்து சாரம்)**

**முடியார் திருமலையில்**(1) **மூண்டுநின்ற**(2) **மாறன்:**
**அடிவாரம் தன்னில் அழகர் வடிவழகை**
**முடியுமடியும் படிகலனும் முற்ற அநுபவித்து**
**அழகரெழில் மூழ்கும் குருகையர்கோன்-பெருமானே!**
**"உம்மழகு இன்னவளவென்ன எனக்கு அரிதாய்த்து**(3)
**இதுதனக்கு என்தன் கரணக்குறைவே ஹேது" எனக் கலங்க**
**"ஆழ்வீர் ! எம்தம் அழகு பேரழகு**
நீள்விசும்பின் உள்ளாரும்(4) **அளப்பரிது" என்றே**
**கரணக்குறைவின் கலக்கத்தை யொழித்து**
**ஒருமைப்படுத்திடவே**(5)
**ஒழிவில் காலமெல்லாம் உடனாகி மன்னி**
**மாலுக்கு வழுவிலா அடிமை செய்ய**

---

1. அழகர்மலை 2. மண்டியநுபவித்த 3. கணிக்க இயலவில்லை
4. நித்யஸூரிகளும் 5. தேற்றிட

எழுசிகர வேங்கடத்தைப் பாரித்த மாறனுக்கு
எங்கும் அடிமைசெயப் புகழொன்றுமால் எப்பொருளும்
தானாய் நிகழ்கின்ற(6) நேர்காட்டி நிற்க-மகிழ்மாறன்
மொய்ம்பால்(7) வாசிகமாய் அடிமை செய்தாராய்(8)
பயிலும்(9) திருமால் பதந்தன்னில் நெஞ்சம்
தயலுண்டு(10) நிற்கும் ததியர்க்கு(11) இயலுடனே(12)
ஆளானார்க்கு ஆளாகும் முடியாத(13) ஆசைமிக
அதுதன்னைப் பாரித்த முற்று(14) கரணங்கள்
அடியார் தமைவிட்டு அவன்பால் படியா(15)
ஒன்று ஒன்றின் செயல் விரும்ப(16)
உள்ளதெல்லாம் தான்விரும்பும் நிலைமைத்தாய்
"சொன்னாவில் வாழ்புலவீர் ! சோறு கூறைக்கா
மன்னா மானிடரை வாழ்த்துதல் என்னாகும்?
சன்மம் பலசெய்து தானிவ் வுலகளிக்கும்
நன்மையுடைய மால்குணத்தை என்னுடனே
நாத்தழும்ப ஏத்தும் ஒருநாளே, சன்மம்பலகழியும்" என
இம்மையிலே இன்பம்பெற வழிகாட்டும்
மாறனை நீ தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே ! நினை

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

6. ஸர்வாத்மபாவம் 7. மதிநலம்பெற்ற சீர்மையால் 8. ஸர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து பேசிப் ப்ரீதராய் 9.அடியரோடு பழகும் 10.பதிந்து 11.அடியார்க்கு 12. முறையாக 13. எல்லையில்லாத 14. எல்லாம் 15.படிய 16. ஒருகரணத்தின் செயலை மற்றொரு கரணம் செய்ய விரும்பும்படியாய்

# நான்காம் பத்து

அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்
ய ஆத்மாநமந்தரோ யமயதி
ஶாஸ்தா விஷ்ணு: அஶேஷஸ்ய ஜக₃த:
ஶாஸ்தா சராசரஸ்யைக: என்கிறபடியே
எல்லாப் பொருள்களிலும் பரந்து நின்று
அவற்றின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி (தொழில் செய்தல், மீளுதல்)
அனைத்தும்
தன் வசமாம்படி நியமித்துக் கொண்டிருப்பவன் எம்பெருமான்
என்கையாலே

ஆழ்வாரும்
ஏர்கொள் ஏழுலகமும் துன்னி முற்றுமாகி நின்ற
சோதி ஞானமூர்த்தியாய்
வானத்தும் வானத்துள் உம்பரும் மண்ணுள்ளும்
மண்ணின் கீழ்த் தானத்தும் எண்டிசையும்
தவிராது நின்றான்,
ஆயே இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே என்று
எம்பெருமானது வ்யாப்தி சொல்லி – அந்த வ்யாப்தி
ஆணை செலுத்துதல் இல்லாத ஆகாசப் பரப்புப்போல் ஆகாமல்
ஆணை செலுத்துதலோடு நிறம் பெற்றிருக்கும் படியை
மறுகல் இல் ஈசன்
ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த
ஈசன்பால் ஓர் அவம் பறைதல் என்கிறபடியே
'ஈச' ஶப்தத்தால் குறிப்பாகவும்
வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீவில்சீர் -

ஆற்றல் மிக்காளும் அம்மான் என்று வெளிப்படவும் 'ஸர்வ நியந்தா' எம்பெருமான் என்று சொல்லி; ஆக இப்படி ஸர்வ நியாமகத்வத்தோடுகூடிய வ்யாப்தியுடைய எம்பெருமானுக்கு

**ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமை செய்யப்** பாரிக்குமளவில்
கீழ்க் கழிந்த காலத்தையும் வரவழைத்துக் கொடுக்க வேணும்
அதிலும் அடிமை செய்யப் பெறவேணுமென்று
**பாலனாய் ஏழுலகுண்டு** என்று தொடங்கித்
தம் ஆசைப்பாட்டைத் தெரிவித்து
**ஆதியங்காலத்து அகலிடம் கீண்டவர்**
**பாதங்கள் மேலணி பைம்பொன் துழாய் என்றே**
**ஓதும் - மால்எய்தினள்** என்று சொல்லும்படி
முன்பு நடந்துபோன இன்பங்களையே வாய்வெருவி
மயக்கத்தை அடைந்தவராய் நிற்க

எம்பெருமானும்
காலதேசங் கடந்த செயல்களையும் – காலோபாதியைக் கழித்து
(காலோபாதி – காலத்தினுடைய வேற்றுமைக்கு உடலான காரணங்கள்)
ஒருபோகியாய்ச் சமகாலமாக்கி ஆழ்வாரை அநுபவிப்பிக்க

ஆழ்வாரும் அவ்வநுபவத்தை
**பூவை வீயா நீர்தூவிப் போதால் வணங்கேனேலும்**
**நின் பூவைவீயாம் மேனிக்குப்**
**பூசுஞ்சாந்து என் நெஞ்சமே** என்று தொடங்கி

**நின் பூத்தண் மாலை நெடுமுடிக்குப்**
**புனையுங்கண்ணி எனதுயிரே** என்னுமளவாக பாகவத அபசாரம் பொறாமையாலே அவதரித்த காலங்களில் உதவி மலர் முதலிய உபகரணங்களைக் கொண்டு சிசிரோபசாரங்களைச் (குளிர்ந்த உபசாரங்கள்)செய்திலேனாயினும்–

எம்பெருமான்

அடியேனுடைய முக்கரணங்களின் செயல்கள் முதலானவற்றையே தனக்கு இனிய பொருள்கள் எல்லாமாகக் கொள்வதே!

இப்படியும் ஒரு தீராக்காதல் – ப்ரணயித்வம் – உண்டோ என்று

**உரைக்க வல்லேன் அல்லேன் என்**
**உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின்**
**கரைக்கண் என்று செல்வன் நான்** என்கிறபடியே

'உம்முடைய ப்ரணயித்வ குணக் கடலின்
கரையினிடத்து ஒரு நாளும் அடியிடமாட்டேன்
**காதல் மையல் ஏறினேன்**' என்று
தன் காதன்மையை வெளியிட்டு
அவன் ப்ரணயித்வ குணத்திலே ப்ரேமம் மேலிடப்பெற்று
அறிவு கலங்கினவாறே – எம்பெருமானும்
'வெள்ளக்கேடு ஆகவொண்ணாது' என்று சிறிது மறைந்து நிற்க
ஆழ்வாரும்

அவனோடு ஒத்த பொருள்களையும் ஸம்பந்தமுள்ள பொருள்களையும் அவனாகவே கருதிப் பேசும்படியான நிலையை அடைந்தவராய்

**பேய்ச்சி முலை சுவைத்தார்க்கு**
**என் பெண்கொடி ஏறியபித்தே** என்னும்படி
பித்தேறப் பெற்றவராய்

இங்ஙனம் பிரிந்து பித்தேறுதற்கும் இடமில்லாத
தேசங்கடந்த திருநாட்டின் நிலையையுங் காண ஆசைப்பட்டு
**சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையோ பெரிதால்**
**ஞாலமுண்டாய்! ஞானமூர்த்தி! நாராயணா! என்றென்று**
**காலந்தோறும் யானிருந்து கைதலை பூசலிட்டால்**
**கோலமேனி காணவாராய் கூவியுங் கொள்ளாயே** என்று
இழவோடே கூப்பிட – எம்பெருமானும்
தேசங் கடந்த திருநாட்டின் நிலையையும்
இங்கிருந்தே காணலாம்படி காட்டிக்கொடுக்க

**ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக்**
**கண்ட சதிர் கண்டொழிந்தேன்** என்கிறபடியே
பெருமாளும் பிராட்டியுமே அநுபவ்யர்களாக (அநுபவிப்பவர்)
அங்குள்ளார் அனைவரும் அநுபாவ்யர்களாக(அநுபவிக்கப்படுபவர்)
நியமித்து வைத்த நேர்பாட்டைக் கண்ணாரக் கண்டு
**மேவி நின்று தொழுவார் வினைபோக மேவும் பிரான்!**
**வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன் மேவியே**
**சூட்டரிய திருவடிக்கண் கூட்டினை, கண்டேனே** என்று
எம்பெருமானைக் கிட்டி முக்தாநுபூதியாகிய
அழிவில்லாத ஆனந்தம் பெற்றமையையும்
திருவடிகளில் சேர்த்துக் கொண்டமையையும் சொல்லி

அது மாநஸ அநுபவமாகையாலே
முக்தருடைய இன்பமான அவ்வநுபவத்தில்
மாநஸிகமாக உண்டான பேற்றிற்குப் பலன்
தேவதாந்தர ஆன்ம ஆன்மீய இவ்வுலக ஐஸ்வர்ய கைவல்ய

வைராக்யங்கள் பெற வேண்டுகையாலே
உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாஅள்
உடம்புடையான் கவராத உயிரினால் குறைவிலமே,
யோகணைவான் கவராத உடம்பினால் குறைவிலமே
கொடு உலகம் காட்டேல்
வேட்கையெல்லாம் விடுத்து
ஐங்கருவி கண்ட இன்பம் ஒழிந்தேன்
தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்தேன் என்று
வைராக்யங்கள் அனைத்தும் தாம் பெற்றமையைச் சொல்லி

நாட்டாருக்கு உபதேச முகமாக
ஒரு நாயகமாய் ஓட உலகுடனாண்டவர்
கருநாய் கவர்ந்த காலர், சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம்கொள்வர் என்று
அரசச் செல்வத்தின் சிறுமையையும்
குடிமன்னும் இன் சுவர்க்கம் எய்தியும் மீள்வர்கள் என்று
ஸ்வர்காநுபவ நிலையின்மையையும்
இறுகலிறப்பு - என்று ஆத்மாநுபவத்தின்
அளவுடைத் தன்மையையும் எடுத்துச் சொல்லி

அங்கு ஓர் ஆடும் கள்ளும்
அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும்
நீர் அணங்கு ஆடும் இளம் தெய்வம்
களன் இழைத்து – என்று
உலகத்தாரால் வெறுக்கப்படும் பதார்த்தங்களைக் கொண்டு
காமிகம் முதலிய ஆகமவழி வழிபாடு பெறும் தேவதைகளின்
அஜ்ஞான, அசக்தி, ஸாபேக்ஷத்வம், கர்மவச்யத்வம் இவற்றை

(ஸாபேக்ஷத்வம் – பிரிதொன்றின் உதவி வேண்டி நிற்றல்)

**பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்**
**நாயகன் அவனே**
**கபால நன் மோக்கத்துக் கண்டுகொண்மின் என்று**
ப்ரத்யக்ஷங்காட்டி

அந்த நாயகன் யார்? எங்குளான்? காணப்போமோ? என்பார்க்கு
**ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா**
**வன்று**
**நான்முகன் தன்னோடு தேவருலகோடு உயிர்படைத்து**
ஸகல ஜகத் காரண பூதனாய்
**பரந்த தெய்வமும் பல்லுலகும் படைத்து**
**அன்று உடனே விழுங்கி**
**கரந்து உமிழ்ந்து கடந்து இடந்து**
கார்யபூதர்களின் ரக்ஷகனாய்
**செறுவில் கரும்பொடோங்கு செந்நெல் மலிந்து கவரிவீச**
**சிரங்களால் அமரர் வணங்க**
**கூடி வானவரேத்த**
**ஆடுபுட்கொடி ஆதிமூர்த்தி என்றும்**
**வீடில் சீர்ப்புகழ் ஆதிப்பிரான் என்றும்**
**பொலிந்துநின்றபிரான் என்றும் திருநாமம் சாற்றி**
**குன்றம்போல் மணிமாட நீடு திருக்குருகூரதனுள்**
அர்ச்சா ஸ்வரூபியாய் எழுந்தருளியிருக்கிறான் என்றும்

**........................................மார்க்கண்டேயனவனை**
**நக்கபிரானும் அன்று உய்யக்கொண்டது**
**கொக்கலர் தடந்தாழை வேலித் திருக்குருகூரதனுள்**

**மிக்க ஆதிப்பிரான்-நாராயணன் அருளே** என்கிறபடியே
வேதம் பரம்பொருளாக அறுதியிடும்
ஸ்ரீமந்நாராயணனே – ஆதிப்பிரானாய் அர்ச்சையிலும்
பரேசத்வம் பொலியக்காட்டி எழுந்தருளியிருக்கிறான் என்று
நாராயண ஶப்தப்ரயோகத்தாலே எடுத்துச் சொல்லி

**நாடிநீர் வணங்கும் தெய்வமும் உம்மையும்**
**முன்படைத்தான்,**
**இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்**
**வலிந்து வாதுசெய்வீர்களும் மற்றும்**
**நும் தெய்வமும் ஆகிநின்றான்** என்று
புறமதத்தவர்களுக்கும் அவற்றின் தெய்வங்கட்கும் காரணபூதனாய்
அவற்றுள் அந்தர்யாமியாக நின்று நடத்தி வைக்கிறவனும்
இந்த ஆதிப்பிரானே என்றும்

**விளம்பும் ஆறுசமயமும் அவையாகியும் மற்றும் தன்பால்**
**அளந்து காண்டற்கரியனாகிய ஆதிப்பிரான்** என்கிறபடியே
வேதபாஹ்யர்களாலும் குத்ருஷ்டிகளாலும்
அளவிட்டுக் கூறமுடியாதபடி
ஸ்வரூப ரூப குண விபூதிகளையுடையனாய் இருக்கும்
ஆதிப்பிரான் பெருமை
மதங்கள் எல்லாம் கூடிவந்து முயன்றாலும்
அளவிட்டுக் கூறமுடியாது என்றும் எடுத்துச் சொல்லி

**ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்து**
**மற்றோர் தெய்வம் பாடியாடிப் பணிந்து**
**வழியேறிக் கண்டீர் ?** – இல்லையன்றோ!
**கரந்து உமிழ்ந்து கடந்து இடந்ததுகண்டும் தெளியகில்லீர்-**

ஆதிப்பிரானுடைய தெய்வச்செயல்களை சாஸ்திரமுகமாக அறிந்தும்
"இவனே அடையத்தக்கவன்" என்று தெளியமாட்டீர்களோ?
என்று
வெறுத்துரைத்து - இவ்வடைவே

லிங்கபுராணம் முதலிய குத்ருஷ்டி ஸ்மிருதிகள்
சமண பௌத்தருடைய பாஹ்ய ஸ்மிருதிகள்
மறுமைப்பயன் கொடுப்பன அல்ல
தாமச நிலையுடையன என்று தெளியச் சொல்லி

**போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு**
**உம்மை இன்னே தேற்றி வைத்தது**
**எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லை என்றே** என்கிறபடியே
'தேவதாந்தரங்களை நம்பும்படியாக வைத்தது
வாசியற எல்லோரும் வீடுபெற்றால்
ப்ரக்ருதியாகிய மாயை சம்பந்தங் காரணமாக
புண்ய பாப ரூபமான - நல்வினை, தீவினை செய்கின்ற உயிர்கள்
அந்தந்தக் கருமங்களுக்குத் தகுதியான பலனை
அநுபவிக்கக் கடவர்கள்' என்கிற
தர்மசாஸ்திர மர்யாதை குலையாமைக்காக என்று
**அறந்திகழும் மனத்தவர்க்கே கதியாம்** தன் தன்மையாலே
தேவதாந்தரபரர்கள் காணப்படுவதற்குக் காரணமும் சொல்லி

வினைகளுக்குக் காரணமாகிய ப்ரக்ருதி-மாயை - சம்பந்தம்
**மம மாயா து₃ரத்யயா** என்கிறபடியே
இந்த 'என்னுடைய மாயை மீற முடியாதது' என்கிற
கீதா வசனம் போலே
**திருக்குருகூரதனுள் ஆற்றவல்லவன் மாயம் கண்டீர்**
பரம சக்தியுக்தனான ஆதிப்பிரான்

ப்ரக்ருதியைக்கொண்டு மயக்கிவைத்தபடி காணுங்கோள்;
இந்த மாயையையிலிருந்து விடுபட
**மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே**
'என் ஒருவனையே சரணமாகப் பற்றுபவர்கள்தாம்
இந்தப் ப்ரக்ருதியான மாயையையிலிருந்து விடுபட முடியும்' என்று
ஸ்ரீ கிருஷ்ணன் சொன்னபடியே
**அஃதறிந்து ஓடுமினே**
'ஆதிப்பிரான் திருவடிகளைச் சென்று சேரத்
திருக்குருகூர் விரையுங்கோள்' என்று வழியும்காட்ட

அவன் ஆதிப்பரன் ஆயிற்றே.–நாம் நெருங்கப்போமோ? என்பார்க்கு
ஆதிப்பிரான் – ஆதிப்பரன்தான் என்றாலும்
**பொலிந்து நின்றபிரான் கண்டீர் !**
தன் நித்ய விபூதியிலே குறையிரந்து
தன்னை வேண்டி வருவோர் இல்லாமையாலே
மழுங்கிக் கிடக்கும் தன் குணங்கள் பரிமளிக்க வேண்டி
**பொலிந்து நின்றபிரான்** என்று
தன் பெயர் மாற்றிச் சாற்றி – குணங்கள் பொலியக் காட்டி
**பிரான்** என்று உபகாரத்வ குணம் காட்டி
**கண்டீர்** என்று காட்சிக்கு எளியனாம் நிலைகாட்டி
**நின்றபிரான்** என்று
வருவோரை எதிர்நோக்கும் ஆர்வம் காட்டி
**மார்க்கண்டேயனவனை உய்யக்கொண்டும்**
**கபால நன்மோக்கத்தும் கண்டு கொண்மின்** என்று
**அருளப்பெற்றோர் ப்ரத்யக்ஷம் காட்டிநிற்கும் அவன் –**
**திருக்குருகைப்பரன் – அடியார்க்கு எளியனன்றோ !**
**ஒன்றும் பொய்யில்லை** – என்று உறுதிசொல்லி

**திருக்குருகூரதனைப் பாடியாடிப் பரவிச் சென் மின்கள்-**
திருக்குருகூர் வாசமே பேறாக – அதன் பெருமைபாடி
**போவான் போகின்றாராக**
திருக்குருகூரை அடையச் சென்மின்கள் என்று
செல்லும் முறையும் காட்ட

அங்குச் சென்று என் செய ? என்ன
**ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே –**
“ஆதிமூர்த்தியே ! உமக்கு அடியோம்:” என்று
கூறித் தொழுங்கோள் என்ன

தொழுதால் வரும் பயன் என் ? என்ன
**மற்றோர் தெய்வம் பாடியாடிப் பணிந்து**
**ஓடியோடிப் பிறந்த பல பிறப்பு இனி இல்லை என்ன**

அடியான் ஆகி என் செய்வது? என்ன
**பொலிந்து நின்றபிரான் கண்டீர்...........போற்றுமினே!**
விளங்கும்படியான குணங்களை எல்லாம்
அவனிடத்திலே கண்டு
அவன் குணங்களை வாயாரச் சொல்லி
குணாநுபவம் பண்ணி
மங்களாசாஸனபரர் ஆகுங்கோள் என்ன

அதன்பின் என்செய ? என்ன
**ஆதிப்பிரானமரும் வளம்கொள் தண்பணை சூழ்ந்தழகாய**
**திருக்குருகூர் அதனை உளம்கொள் ஞானத்து வைம்மின்**
**உம்மை உய்யக்கொண்டு போகுறிலே,**
**குறியமாண் உருவாகிய நீள்குடக்கூத்தனுக்கு**
**ஆட்செய்வதே ! என்கிறபடியே உயர்வுபெற வேண்டுதியேல்**
**உம்உடலில் உயிர்இருக்கும்வரை –**

ஆதிப்பிரானே விரும்பி வந்து அமரும்
வளம்கொள் தண்பணை சூழ்ந்த – சுபாச்ரயமான
திருக்குருகூர் திவ்ய தேசத்தையும்
அங்கு உறையும் ஆதிப்பிரானையுமே
உம் மானஸ ஞானத்திற்கு விஷயமாகக் கொண்டு
அர்த்தக்ஞான த்வயானுஸந்தானம் கைகூடியவராய்
வாமனனாகவும் ஸ்ரீ கிருஷ்ணனாகவும் அவதரித்த ஆதிப்பிரானுக்கு
**ஆட்செய்து ஆழி(தி)ப்பிரானைச் சேர்ந்தவன்** என்று
உலகோர்கொண்டாட
**அளியல் நம்பையல்** என்று அவன் உகக்க
**ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமை** செய்தலையே ...............
பரம புருஷார்த்தமாகக் கொள்ளுங்கோள். அதனாலே
**மீட்சியின்றி வைகுந்த மாநகர் மற்றது கையதுவே**
என்கிறபடியே
உபயவிபூதி கைங்கர்ய சாம்ராஜ்யம் கைகூடும் என்று
எடுத்துச்சொல்லி
ஆக இப்படியே உபதேசங்களைப் பண்ணி
வேறு பயன்களிலும் வேறு தெய்வங்களிலும் புறமதங்களிலும்
குத்ருஷ்டி மதங்களிலும் விரக்தியை உண்டாக்கி
தேவதாந்தரபரர்களைத் திருத்தி
அர்ச்சையிலும் பரத்வம் பொலிய நிற்கும் எம்பெருமான்இருப்பைச்
சொல்லி
உலக காரணனாக இருத்தல் முதலான ப்ரமாணப்பொருத்தங்களாலே
பகவத் ஸமாச்ரயணத்தின் (பகவானைப் பற்றுதலின்)இன்சுவை
ஸம்ஸாரிகளுக்கு ருசிக்கும்படி செய்கிறார் நான்காம் பத்தில்

## காதலிக்க - நெஞ்சே! நினை -4

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி - நான்காம்பத்து சாரம்)

உலகுக்கோர் நாயகமாய் உய்க்கும் இன்பம்
வானோர் இரு(1) விசும்பில் ஏறிஉய்க்கும் இன்பம்
திரமாகா(2) மன்னுயிர்போகம்(3) தீது
மாலடிமையே இனிதாம் என்றுரைத்த மாறன்
பாலரைப்போல் சீழ்கி(4) பரனளவில் வேட்கையால்
காலத்தால் தேசத்தால் கைகழிந்து சாலவரிதான
அவன் போகத்தில்(5) ஆசையுற்று நைந்திடவே
கோவான ஈசனுமவர் குறையெல்லாம் தீரவே
ஓவாத காலத்து உவாதிதனை மேவிக்கழித்து(6)
தன்னை அடையக் காட்டிக் கலந்திட்டு(7)
மண்ணுலகில் முன் கலந்தமாலும் பிரிந்திடவே-மாறன்
பெண்ணிலைமை யாகிக் காதல் பித்தேறி
முன்தோன்றும் போலி முதலான பொருளை
அவனாய் நினைந்து மையல்தான்(8) எய்திடவே
மாறன்தன் மிக்கமயல் ஆற்றுதற்கா-மாலவனே
தன்பெருமை(9) தோற்றிவந்து நன்கு கலந்திடவே
மாறனுமே பெருமான்தன் பெற்றி(10) கண்டு
உகந்து போற்றித் தன்வீ றுரைத்து(11)
சென்றதுயர்(12) தீர்ந்திட்டான் - என்றாலும்
தீர்ப்பாரிலாத மயல்தீரக் கலந்த மால்தானும்
ஓர்ப்பு ஆதுமின்றி(13) உடன்பிரிய, மாறனுமே

1.பரந்த 2.நிலைநில்லா 3. ஆத்மாநுபவம் 4.சிணுங்கி 5.பகவதநுபவம் 6.இடையறாத காலத்தினுடைய வேற்றுமைக்கு உடலான காரணங்களை நீக்கி 7. தன் அபதானங்களைக் காட்டி-ப்ரணயித்வம் புலப்படுத்திக் கலந்து 8. வ்யாமோஹம் 9. தன்குண, விக்ரக வைபவங்கள் 10. மேன்மை 11. உபயவிபூதியிலும் தன்வாசி - சிறப்புச்சொல்லி 12. நிகழ்ந்ததுன்பம் 13. ஆழ்வாரின் மென்மைபாராது

நேர்க்க(14) அறிவழிய(15) உற்றாரும் அறக்கலங்க(16) - தோழியரோ
அதுதடுத்து மாலடியார்(17) பேருரைக்க(18)-மாறனுமே
சீலமிகு கண்ணன் திருநாமம் கேட்டுணர்ந்து
மேலவன்தன் மேனிகண்டு மேவுதற்குச் சாலவருந்தி
இரவுபகல் மாறாமல்(19) கூப்பிட் டிருந்தனனே.
"ஏறுதிரு வுடையார் ஈசனுகப்புக்கு வேறுபடில்(20)
என்னுடைமை(21) மிக்கவுயிர்(22) என்றனக்கும் வேண்டா" என
வெறுத்துரைத்து; நண்ணாது மாலடியை
மாநிலத்தே வல்வினையால் எண்ணாராத்(23) துன்பமுறும்
மன்னுயிரின் தண்ணிமையைக் கண்டிருக்க மாட்டாமல்
கண்கலங்கி " ஒன்றுமிலைத் தேவு இவ்வுலகம்
படைத்தமால் அன்றி" எனஆரு மறியவே
நன்றாக மூதலித்துப் பேசியருள் மொய்மகிழோன்
தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே! நினை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

14. முன்னிலும் காட்டி மிக அதிகமாக 15. சைதந்யம்அழிந்தாராய் 16. விபரீதப் ப்ரவ்ருத்தி பண்ண 17. திருமாலினுடையவும் அடியாருடையவும் 18.பெருமை சொல்ல 19. இடைவிடாமல் 20. விபரீதமானால் 21. மாமை முதலான ஆன்மீயங்கள் 22.மேன்மையுடைய ஆன்மா 23.அளவற்ற

# ஐந்தாம் பத்து

**அம்மான் ஆழிப்பிரான் எவ்விடத்தான், யான் ஆர்?**
**எம்மா பாவியர்க்கும் விதி வாய்க்கின்று**
**வாய்க்கும் கண்டீர்** என்கிறபடியே
எம்பெருமானுடைய பெருமையையும்
தங்களுடைய தாழ்வினையும் நினைந்து பின்வாங்கும்படியான
மா பாவிகள் திறத்திலும் கூட

ஜீவாத்மாக்களின் கர்மங்கட்குத் தக்கபடி
நடத்துவதற்குக் காரணமான – எவ்விதத் தடையுமில்லாத
தன் ஸ்வாதந்த்ர்யமாகிற கரையையும் அழித்துக்கொண்டு
தன் (பகவானுடைய) திருவருள் தம் பக்கல் வாராதபடி
தீவினைகளையே செய்யும் ஜீவாத்மாக்களின்
செருக்கினாலாய ஸ்வாதந்த்ர்யம் ஆகிற கரையும் அழியும்படி
**ஆ! ஆ! என்று அருள் செய்து**
**தானே இன்னருள் செய்து** என்கிறபடியே
தன்பக்கல் பாரத்தை வைத்த அடியார்க்கு
**கலியுகம் ஒன்றுமின்றிக்கே**
தன் பேறாகவே அருள் செய்யும்படியான
'**தொல்லருள்**' என்கிறபடியே
இயல்பிலேயே பரம காருணிகனான சர்வேசுவரன்

**பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமேயாடி**
**தேனே இன்னமுதே என்றென்றே சிலகூத்துச் சொல்லி**
**வள்ளலே! மணிவண்ணனே ! என்றென்றே**
**அவனையும் வஞ்சிக்கும்**

**கள்ள மனம் தவிர்ந்தே** என்கிறபடியே
மெய்கலவாத பொய்யைச் சொல்லி
பக்தியினால் பரவசப்பட்டாரைப் போல நடித்து
மனம் புறப்பொருள்களில் அன்புற்றிருக்க
வேறு பயன்களைக் கருதாதாரைப் போல
பகவானுடைய வடிவழகையும் வள்ளல் தன்மையையும்
சொல்லுகிறார் என்று காண்பவர் நினைக்கும்படி
பலகாலும் சொல்லிக்கொண்டு
முற்றறிவினனான பகவானையும் மயக்கும்படியான
கள்ள மனத்தை ஆழ்வார் தவிரும்படி
**தானே இன்னருள்செய்து**
**என்னை முற்றவும் தானானான்** என்று
சகலவித இனிய பொருள்களும் ஆழ்வாருக்குத் தானேயாகி நிற்க

ஆழ்வாரும்
**வெள்ளத்தணைக் கிடந்தாய்**
**இனி உன்னைவிட்டு என்கொள்வன்?** என்று சொல்லி
**கண்ட சதிர்கண்டு**
**கண்டு கேட்டு உற்று மோந்து உழலும்**
**ஐங்கருவி கண்ட இன்பம்**
**தெரிவரிய அளவிலாச் சிற்றின்பம் ஒழிந்தேன்** என்று
எம்பெருமானுடைய இனிமையாலே பொறிவழி விஷய
சுகங்களையும் கைவல்யத்தையும் அடைய வெறுத்தவராய்

கீழே பிறந்த வைராக்யத்தின் பயனாக
விரக்தி ப$_4$ல பரமாத்ம ராகமானது
**பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த** என்கிறபடியே

அளவிட்டு அறியமுடியாததாய்

**பின்னின்ற காதல் நோய் நெஞ்சம் பெரிதடுமால்** என்று

பிடரிபிடித்து நின்று நெஞ்சினை முடிக்கும்படியாய்

**கழிய மிக்கதோர் காதலள் இவள்** என்று

பிறர் கொண்டாடும் படியாய்

**கடல் ஞாலம் செய்தேனும் யானே** என்று தொடங்கி

**வாய்ந்த வழுதிவள நாடன்** என்னுமளவாக

அநுகார முகத்தாலே (ஆழ்வார்) தாமே

பகவானுடனே தம் நெருக்கத்தைப் பேசும்படியாய்

**நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலும்**

**இனி உன்னைவிட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன்** என்று

அவனைவிட்டு ஒருகணமும் தரிக்கமாட்டாதபடியாய்

**ஆராவமுதே ! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே**

**நீராய் அலைந்து கரைய** என்கிறபடியே

ஞானத்திற்குக் காரணமான,

ஞானம் செல்லுதற்கு வழியான ஆன்மாவிற்கு நிலைக்களமான

சரீரம் என்கிற ஜடப்பொருளும் கூட நிலைகுலையும்படியாய்

அச்சரீர நிலைகுலைவும்

**மானேய் நோக்கு நல்லீர்!**

**வைகலும் வினையேன் மெலிய** என்னும்படி

ஒருகாலத்தில் மட்டுமல்லாமல் எல்லாக் காலமும் மெலியும்படியாய்

**நிறந்தனூடுபுக்கு எனதாவியை**

**நின்று நின்று உருக்கி உண்கின்ற** என்னும்படி

பகவானுடைய திவ்யாத்ம குணங்கள் மார்பிலே புகுந்து

ஆன்மாவை இடைவிடாமல் நீர்ப்பண்டமாக்கும்படியாய்ப்

பெரிதும் வளர

ஆக இப்படியே ஸம்ஸாரமாகிற விஷமரத்தில்
பகவத் பக்தி, பாகவதக் கூட்டுறவு என்கிற
அமிர்தக்கனிகள் இரண்டு கைபுகுந்த ஆழ்வார்

கீழ்ப்பத்தில் ஒன்றும் தேவும் பதிகத்தில்
மற்றைத் தெய்வம் நாடுதிரே என்றும்
பாடி ஆடிப் பரவிச் சென்மின்கள் என்றும்
தெய்வம் மற்றில்லை என்றும்
பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே என்றும்
ஒன்றும் பொய்யில்லை போற்றுமினே என்றும்
அஃதறிந்து ஓடுமினே என்றும்
ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே என்றும்
மற்றைத் தெய்வம் விளம்புதிரே என்றும்
உளம்கொள் ஞானத்து வைம்மின்
உம்மை உய்யக்கொண்டு போகுறிலே என்றும்
ஆட்செய்து உறுவதாவது என்றும்
மற்றைத் தெய்வங்கள் நாயகர் அல்லர் என்பது முதலாக
பகவானுடைய முதன்மையையும்
பகவானை அடைவதற்கு வழியையும்
பகவானுக்குச் செய்யும் தொண்டே புருஷார்த்தம் என்பதையும்
தெளிய உபதேசிக்கக் கேட்டுத் திருந்தி
அடிமைபுக்க ஸ்ரீ வைஷ்ணவர்களையும்
இப்படி அவர்களைத் திருத்துகையாலே அவனுக்கே ஆட்செய்து
ஆழிப்பிரானைச் சேர்ந்தவனாகிய தம்மையும் காண்பதற்கு

**வைகுந்தம் பூதங்களேயாய்**

**தடம் கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதங்களேயாய்**

**தேவர்கள் தாமும் புகுந்து** என்கிறபடியே

நித்யஸூரிகளும் முக்தர்களைப் போன்றவருமான தேவர்கள்

**நேமிப்பிரான் தமர்போந்தார்** – என்கிறபடியே வரக்கண்டு

கண்ணுக்கு இனிதாக இருக்குமதினாலே

**கண்டோம்! கண்டோம்!** என்று

பலகாலும் அவர்கள் வரவினைச் சொல்லி

**பொலிக! பொலிக!** என்று அத்திரளுக்குப் பல்லாண்டும் பாடி

ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானுடையவும் ஸ்ரீ விபீஷணாழ்வானுடையவும்

**எங்குமுளன்** என்றும் **ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ** என்றும்

உபதேசிக்கக் கேட்டும் திருந்தாத

ஹிரண்யனையும் இராவணனையும் போன்று

அசுரர் அரக்கர் தன்மை வாய்ந்தவர்களை

**அரக்கர் அசுரர் பிறந்தீருள்ளீரேல்** என்று தேடிப்பிடித்து

**கொன்று உயிர் உண்ணும் விசாதி, பகை, பசி,**
**தீயன எல்லாம்**

**நின்ற இவ்வுலகின் கடிவான்**

**திரியும் கலி நீங்க**

பகவதநுபவ மகிழ்ச்சியாலே

**இரியப் புகுந்து இசைபாடி எங்கும் இடங்கொண்ட**

பாகவதோத்தமர்களை

**மேவித் தொழுது உய்ம்மினீர்கள்** என்று உபதேசித்து
பக்திபரர் ஆக்கியும்

தேவதாந்தரப் ப்ராவண்யத்தாலே

எம்பெருமான் வைபவத்தை அறியமாட்டாதாரைப் பார்த்து

நிறுத்தி உம் உள்ளத்துக்கொள்ளும் தெய்வங்களை
நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே,
ஸர்வதேவ நாயகனான அவனை
நக்கபிரானோடு அயனும் இந்திரனும் முதலாகத்
தொக்க அமரர்குழாங்கள் கண்ணன்திருமூர்த்தியைமேவி
மிக்க உலகுகள்தோறும் எங்கும் பரந்தன
ஒக்கத் தொழுகிற்றிராகில்-கலியும் ஒன்றுமில்லை என்று
தேவதாந்தரபரர்களுக்கு உபதேசித்து
பகவானிடத்தில் பக்தி உடையவர்களாகத் திருத்தியும்

இப்படியே திருந்தாதவர்களைத் திருத்தியதோடு அமையாமல்
முன்பே திருந்தினவர்களாயும்
கண்ணுக்கினியன கண்டோம்
தொண்டீர் எல்லீரும் வாரீர் என்று
ஆதரத்தோடு அழைத்துக் காட்டலாம்படி உள்ளவர்களாய்
கண்ணுக்கினியன காட்டலாம்படியானார் என்றேபெயரிட்டு
பெருமையோடு அழைக்கத் தக்கவர்களாய் –
உபாயத் துணிவுடைமை (உபாய அத்$_4$யவஸாயம்)
என்ற நிலையில் நிற்குமவர்களாய் – இருப்பவர்களுடைய
உபாயத் துணிவுடைமை என்ற ஞானக் கண்ணிலே

மநஸி விலஸதா$_3$க்ஷ்ணா ப$_4$க்தி ஸித்$_3$தா$_4$ஞ்சநேந
மனத்தின்கண் உள்ள யோகக் கண்ணிலே
ப$_4$க்தி ஸித்$_3$தாஞ்சனமிட்டு
வேதாந்தத்தில் மறைந்திருக்கின்ற நிதிபோன்ற
எம்பெருமானுடைய பெருமையைப் பார்ப்பவர்கள் போலே

என் நெஞ்சினால் நோக்கிக் காணீர் என்று
பேற்றின் பெருமையை விளக்கிக் காட்டுவதான
தமக்குண்டான பக்தி ஸித்₃தாஞ்சனமிட்டு
பாகவதர்களுடைய கூட்டுறவைக் காணுதல் இனிதாம்படியான
ஞானம் பிறந்த அவர்களுக்கு
பேற்றிலே பதற்றத்திற்கடியான பக்தியை உபதேசித்து
பக்திபரர்களாக்கித் தலைக்காட்டுகிறார் ஐந்தாம் பத்தில்

## காதலிக்க – நெஞ்சே! நினை –5

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-ஐந்தாம்பத்து சாரம்)

**காதலின்றிப் பொய்யாகப் பேசும் புறனுரைக்கும்
கையாரும் சக்கரத்தோன் மெய்யான பேற்றை
உபகரிக்கும் பேரருளின் தண்ணளியை மாறனுமே
பொலிந்து போற்றிட்டு மண்ணுலகில்
பூமகள்கோன் தொண்டர் மலிவு(1) தன்னைக்
கண்டுகந்து பொலிக ! பொலிக ! என வாழ்த்தி
திருந்தா தாரைத் திருத்திவாழ் மகிழ்மாறன்
மாசறுசோதிக் கண்ணன் வந்து கலவானால்(2)
ஆசைமிக பழிபாரா(3) ஏசுஅறத்(4) தான் பிறந்த
ஊரும் உள் நடுங்க மடலூர ஒருமிக்க
ஊர நின்ற மடலூர ஒண்ணாதே
கூரிருள்சேர் கங்குல் கூடிநின்று தீதுசெய
மாறன் திருவுளத்துச் சென்றதுயர் ஓதமிக வரிதாய்
அதுகண்டு அன்னைமார் முனிய ஒருப்படவே
"எங்ஙனே நீர் முனிவது என்னையினி ? நம்பி
வடிவழகு இங்ஙனே தோன்றா நின்றதென்னே!
அங்கண் உருவெளிப்பாடு ஆ! ஆ! " என்றுரைத்து**

1. சம்ருத்தி 2. கலவாமையால் 3. பழிக்கஞ்சாது 4 பழிக்கும் எல்லை கடந்து

கடல்ஞாலத்து ஈசனை முன்காணாமல் நொந்தே
உளனா(5) அநுகரிக்கத் திடமாக வாய்ந்து(6)
அவனாய்த் தான்பேசும் மாறனார்
"பெருமானே ! உன்றன்னைப் பெற்றிடவே
நோற்ற நோன்பாதி ஒன்று மிலேன்
உன்றன்னை விட்டொன்றும் ஆற்ற கிற்கின்றிலேன்
பேற்றுக்கு உபாயம் உன்றன் பேரருளே - சாற்றுகின்றேன்
இஃது என்னிலைமை" என்றலுமே - ஆரா
வமுதாழ்வார் வருவான் என்றிருக்க வாரானாய்
ஆராவமு தாழ்வார் தாமாதரித்த பேறுகளைத்(7)
தாராமையாலே மிகத்தளர்ந்து தீராத ஆசையுடன்
ஆற்றாமை பேசி அலமந்து - அது குளிர
விபவாவதாரக் கடல்மூழ்க நினையநெஞ்சும் உருகிடவே
பிறந்துலகம் காத்தளிக்கும் பேரருட் கண்ணா! உன்
சிறந்தகுணத் தாலுருகும் சீலத்திறம் தவிர்ந்து
சேர்ந்து அநுபவிக்கும் நிலைதா என வேண்டிற்றாய்
ஆரா வமுதனை அநுபவியாக் குறைதீர
மாநலத்தால்(8) திருவல்லவாழ் புகப்போய்த் தானிளைத்து
வீழ்ந்த அவ்வூர்ச் சோலை தன்னில்
தோழிமார் மேல் நலங்க(9) மிகநலிந்து
துன்புற்றுச் சொன்ன மாறன் சொலவெல்லாம்
கற்பார் தங்கட்குப் பின்பிறவி இல்லை பிற -ஆதலினால்
மாறனை நீ தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே! நினை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

5.தான் உளனாக 6. திண்ணிய வேட்கை கொண்டவராய் 7. குசலம் விசாரித்தல், குளிர நோக்குதல்,தழுவுதல் முதலியன 8.மிகுந்த ப்ரேமத்தோடே 9.நிஷேதச் சொல்லால் நலங்க

# ஆறாம் பத்து

ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே
திருவிண்ணகர்ச் சேர்ந்தபிரான் வரன்கொள் பாதமல்லால் —
இல்லை யார்க்கும் வன் சரணே
வன் சரண் சுரர்க்காய்
அடிக் கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின் என்று —
அருள் கொடுக்கும் என்கிறபடியே
ரக்ஷகனாய் விளங்கும் தம்முடைய பேரருளாலே

ஸ்ரீ விபீஷணாழ்வானுடைய
ஸர்வ லோக ஶரண்யாய என்ற வார்த்தை
கடலோசை ஆகாதபடியும்
அப₄யம் ஸர்வ பூ₄தேப்₄யோ த₃தா₃மி ஏதத்வ்ரதம் மம
என்கிற தன்வார்த்தை வாய்வார்த்தை ஆகாதபடியும்
சுமந்து மாமலர் நீர் சுடர் தூபம்கொண்டு அமர்ந்து
வானவர் வானவர் கோனொடும்
நமன்றெழும் திருவேங்கடம் என்றும்
எழுவார் விடைகொள்வார் ஈன்துழாயானை
வழுவா வகை நினைந்து வைகல் தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடம் என்றும்
போதறிந்து வானரங்கள்;
கண்டு வணங்கும் களிறு என்றும் சொல்லுகிறபடியே
நித்யஸூரிகள், இவ்வுலக மக்கள்,
ஒரு பயனைப்பெற விரும்புபவர்கள் திரியக்குகள்
அனைவரும் வந்து வணங்கும்படி
திருமலையில் எழுந்தருளி சேவை சாதிக்கையாலே

தன்னுடைய உபாயத்வம் கல்வெட்டாம்படி காட்டிநிற்கும்
சர்வேசுவரன்

பகவானை அடைவதற்கு உறுப்பாக
வேறு உபாயங்களைப் பண்ணத் தகுந்த ஞானம் சக்தி
ஆகிய இவை இல்லாமை காரணமாக அமையாமல்
**உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன்**
என்கிற
ஸ்வரூப யாதாத்மிய ஞானத் தெளிவுடைமையும் காரணமாகாமல்
**அங்குற்றேனல்லேன் இங்குற்றேனல்லேன்** -
க்ருத க்ருத்யர்களய் நித்யமாய்
உன்னை அநுபவித்துக்கொண்டிருக்கும் நித்யர் முக்தர் குழுவிலும்
தம்தலையால் ஸாதனாநுஷ்டானம் பண்ணும்
இந்நிலத்தார் குழுவிலும் அடியேனுக்குச் சேர்த்தி இல்லை
**உன் காரமர் மேனி** (பகவத் தத்துவம்) **விளைவித்த**
அளவிட முடியாதபடி நெடுகிச் செல்கின்ற கடல்புரையும்
**பேரமர் காதலாலே** (பக்தி பாரவஸ்யத்தாலே)
**காலாழ நெஞ்சழிய கண்சுழல**
**உன்னைக்காணும் அவாவில் வீழ்ந்து** (ஆசைப்பெருக்
காலே தள்ர்ந்து)
**நான் எங்குற்றேனுமல்லேன்**
ஸாதனாநுஷ்டானம் பண்ணும் நிலையிலும் அடியேனில்லை,
**என் நான் செய்கேன்? யாரே களைகண்?**
**என் கொள்வன் உன்னை விட்டு?**
**பூவார் கழல்கள் அருவினையேன்**
**பொருந்துமாறு புணராயே** என்று யாசிக்கும்படியான
**ஸ்வப,க்தேர் பூம்நா வா-மெய்யமர் காதல்** என்கிறபடியே
அவனுடைய ஸ்வரூபத்தை நினைத்தாதல் அல்லது

அவன் குணங்களை நினைத்தால் அன்றிக்கே
**கடியன் கொடியன் நெடியமால்** – **ஆகிலும்**
**கொடிய என்நெஞ்சம் அவனென்றே கிடக்குமால்** என்கையாலே
தரிக்க வொண்ணாதபடியாய்
திருமேனியில் அணைய வேண்டும்படியான
காரணம் பற்றாத பக்திவசப்பட்ட காதலையுடையராய்
அதன் பயனாக வேறு உபாயங்களுக்கு ஆள் அல்லாமல்
(Being not a personality by other means)

**களைவாய் துன்பம் களையாதொழிவாய்**
**களைகண் மற்றிலேன்** என்று வேறு புகலிடம்
இல்லாதபடியைத் தெரிவித்த ஸ்வாமி நம்மாழ்வாருக்கு
**ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்**
என்னும்படி
தன்திருவடிகளையே – வேறு ஸாதனங்களை ஸஹிக்காத
ஸாதனமாக எம்பெருமான் காட்டிக் கொடுக்க – ஆழ்வாரும்

**கழல்கள் அவையே சரணாகக்கொண்ட** என்றும்
**அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்** என்றும்
**நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு** என்றும்
அவன் திருவடிகளையே உபாயமாகக் கொண்டு
**நாடொறும் ஏக சிந்தையனாய்** அவனைப் பெற்றன்றித்
தரியாத மாறுபடாத கழிபெருங் காதலையுடையராய்

ஸ்வரூப பாரதந்த்ர்யத்தாலே
அவன் ஒருவனாலேயே காக்கப்படவேண்டும் என்னும்
துணிவுடைய தம் எண்ணத்தை
**நிவேதயத மாம் க்ஷிப்ரம்** என்று ஸ்ரீவிபீஷணாழ்வான்

வானர முதலிகளை யிட்டுத்
தம் கருத்தைத் தெரிவித்தாப் போலே இவரும்
**வைகல் பூங்கழிவாய் வந்து மேயும் குருகினங்காள்!**
**கனிவாய்ப் பெருமானைக் கண்டு**
**வினையாட்டியேன் காதன்மை**
**கைகள் கூப்பிச் சொல்லீர்** என்று தொடங்கி
**ஏறு சேவகனார்க்கு**
**என்னையும் உளள் என்மின்களே** என்னுமளவாக
இறைவனை அடைவதற்குரிய
ஞானம் அநுட்டானம் என்கிற இரண்டு சிறகுகளையுடைய
சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி
அவன்பால் போக்கி அறிவித்த அளவிலும்
அவன் வரத் தாழ்க்கையாலே
ப்ரணய ரோஷம் தலையெடுத்து நிற்க

அதனைத் தீர்க்க எம்பெருமான் மேல் விழுந்த அளவிலும்
**போகு நம்பீ! கழகமேறேல் நம்பீ!** என்று உபேக்ஷித்து
அவன் முகம்பாராமல் இருப்போமென்று
சிற்றில் இழைப்பதும் சிறுசோறு அடுவதுமாக இருக்க

அவனும் - ஆழ்வார் முகங்கொடாமை
தன் இன்பத்திற்கு விரோதமாகையாலே - ஆழ்வாருடைய
ஆதரமின்மை வேறொன்றில் நோக்குடைமை
ஆக இருக்கும் செயல்களை
ஆழ்வார்தமக்கும் முடிந்த உபாயமான தன் திருவடிகளாலே
**அழித்தாய் உன் திருவடியால்** என்கிறபடியே
தம் திருவடிகளால் உபலக்ஷிக்கப்படுகிற

(குறிப்பால் காட்டிக்கொடுக்கப்படுகிற)
திருமேனி அழகைக்காட்டிக் குலைக்க

ஆழ்வாரும் எம்பெருமானோடு பொருந்தினவராகி
கீழ் – **பிறந்தவாறும்** – திருவாய்மொழியில்
அவதார அநுபவம் பெறாத இழவோடே பதறி
அந்த அவதாரங்களின் செயல்களையும் குணங்களையும்
நினைத்தாகிலும் தரிப்போம் என்று இழிந்த அளவில்

**நிறம்தன் ஊடுபுக்கு எனதாவியை நின்று நின்று உருக்கி உண்கின்ற ;**
**பையவே நிலையும் வந்து என் உயிரை உருக்கி உண்ணும் ;**
**உள்ளம் உள்குடைந்து என் உயிரை உருக்கி உண்ணும் ;**
**ஊடு புக்கு எனதாவியை உருக்கி உண்டிடுகின்ற** என்று சொல்லும்படி
அவற்றை நினைத்தும் தரிக்க முடியாதபடி உயிரும் உருக

அப்படி உருகும் உயிரை
**பிறந்து உலகம் காத்தளிக்கும் பேரருட் கண்ணா!**
**உன் சிறந்த குணத்தால் உருகும் சீலத் திறம் தவிர்ந்து**
**சேர்ந்து அநுபவிக்கும் நிலை செய்** என்று
**நாகணைமிசை நம்பிரான் சரணங்களை**
உபாயமாகப் ப்ரதிபத்தி பண்ணி வரிக்க
அவனும் ஆழ்வார் நினைவைத் தலைக்கட்டிக் கொடுக்க

ஆழ்வாரும் - குரவை ஆய்ச்சியரில் - அதனை
என்ன குறை எனக்கே! என்று தொடங்கி
நண்ணி நான் வணங்கப்பெற்றேன் ;
எனக்கு ஆர்பிறர் நாயகரே என்று
செருக்கிப் பேசும்படி பலித்தவாறே

மற்றை உபாயங்களை விடுகை ஆகிற முறையோடுகூட
ஸக்ருதே₃வ ப்ரபந்நாய - என்கிறபடியே
இறைவன்மாட்டுச் சரண்புகுதலைச்செய்தல் ஒருமுறைஎன்பதினாலே
ஸித்தோபாய வரணம் ஒருமுறை பண்ணவேண்டும் என்று
நினைத்து
பிதரம் மாதரம் தா₃ராந் புத்ராந் ப₃ந்தூ₄ந் ஸகீ₂ந்கு₃ரூந்
ரத்நாநி த₄நதா₄ந்யாநி க்ஷேத்ராணி ச க்₃ருஹாணி ச
ஸர்வ த₄ர்மாம்ஶ்ச ஸம்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்ச
ஸாக்ஷராந்
லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தே வ்ரஜம் விபோ₃
என்கிறபடியே
உறவுகள் - செல்வங்கள் - தர்மங்கள் எல்லாமும்
கைவல்யம் உட்பட பயன்கள் எல்லாமும் முற்றத்துறந்து
ஓ! ப்ரபுவே! உம்முடைய உலகளந்த திருவடிகளை
ஶரணமாக அடைந்தேன் என்கிற சுலோக முகத்தாலே
ப₄விஷ்யத் புராணமும், அப்புராண வசனத்தைப்
பின்பற்றுகிற பௌராணிகரும்
அந்த ஸித்தோபாய வரணத்திற்கு அங்கமாக
விடத்தக்கவைகளாகச் சொல்லிய-சேதந அசேதநமாகவுள்ள
போலிப்பேறு போலி வழிகளை - ஆழ்வாரும்
(ப்ராப்ய ப்ராபக ஆபா₄ஸங்கள்)

**அன்னைமீர்! அணிமாமயில் சிறுமான் இவள் நம்மைக்**
கைவலிந்து என்று தாமாகக் கைவிட்டும்
**இழந்தது சங்கே என்று**
உறங்குவான் கைப்பண்டம் போலே
அவை தன்னடைவே நெகிழ்ந்து போகவிட்டும்
**இதெல்லாம் கிடக்க இனிப்போய்;**
**எம்மை ஒன்றும் நினைந்திலள்;**
**இன்று எனக்கு உதவாது அகன்ற** என்கிறபடியே
வெறுத்து அகலவிட்டும் – மேற்கூறிய பொருள்களில்
அவன் அடியார்க்கு இனியனவாகக் கொடுக்கத் தகுவனவற்றை
**நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ!**
**ஓடிவந்து என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ!**
**பொன்னுலகாளீரோ! புவன முழுதாளீரோ!** என்று
தாம் பேறாகப் பெற இருக்கிற பரமபதம் உட்பட
சேர்க்குமவர்க்குப் பரிசிலாகக் கொடுத்தும்

**கிறி செய்து என்னைப் புறத்திட்டு**
**இன்னும் கெடுப்பாயோ** என்று முறையிட்டும்
**பாவியேனைப் பலகாட்டிப் படுப்பாயோ** என்று
நாட்டாருக்கு போக்யமான
மகளிர் முதலிய விஷயாந்தரங்களைக் காணப்புக்காலே அசக்யமாய்
அவற்றைப் பற்றின ப்ரஸ்தாவ மாத்திரத்தாலேயே
தாம் மூச்சு அடங்கும்படி அச்சங்கொண்டவராய்த்
தாம் முடியும்படியைத் தெரிவித்து அவற்றை விட்டும்
**சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும்**
**தேவபிரானையே**
தந்தைதாய் முதலிய உறவுகள் எல்லாமும் என்றும்

**உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை**
**எல்லாம் கண்ணன் என்றும்**
(த₄ாரக போஷக போ₄க்யமெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனே என்றும்)
**வைத்த மாநிதியாம் மதுசூதனையே என்றும்**
(ஆபத்தில் உதவச் சேமித்து வைத்த
அழிவில்லாத தனமும் மதுசூதனனே என்றும்)
**பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்**
**யாவையும்**
**திருமால் திருநாமங்களே கூவி எழா நிற்பவராய்**
(விளையாட்டுக் கருவிகளால் பிறக்கும் சுவை எல்லாம்
திருமாலினுடைய திருப்பெயரை இட்டழைக்கவே உண்டான
நிலையுடையராய்)
ஆக இப்படியே தாம் விட்டவை எல்லாம்
தாம் பற்றுகிற பகவத் விஷயம் ஒன்றுமேயாக நினைத்து

இவை மனத்தின் அநுப₄வ மாத்திரமன்றிக்கே
தேவரீருடைய திருவடிகளைக் கண்கூடாகக் கிட்டுவது என்றோ?
என்று கேட்பாராய்

**கோலத் திருமாமகளோடு உன்னைக் கூடாதே**
**சாலப் பலநாள் அடியேன் இன்னம் தளர்வேனோ?**
**பாயோரடி வைத்து அதன்கீழ்ப் பரவை நிலமெல்லாம்**
**தாய் ஓரடியால் எல்லா உலகும் தடவந்த**
**மாயோன் உன்னைக் காண்பான் வருந்தி எனைநாளும்**
**தீயோடு உடன்சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ?**
**கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ?**
**புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே போன**
**முதல்வாவோ! என்று**

ஆக இப்படியே பெருகா நின்ற ஆர்த்தியோடே (ஆசையோடே)

**லோக விக்ராந்த சரணௌ ஶரணம் தே வ்ரஜம் விபோ$_4$**
உலகளந்த உம்முடைய திருவடிகளை
இறைவா! ஶரணமாக அடைந்தேன்! – என்கிறபடியே
ஸௌஶீல்யமும் வாத்ஸல்யமும், ஸௌலப்$_4$யமும் ஸ்வாமித்வமும்
ஞான சக்தி முதலிய குணங்களின் நிறைவும்
ஆக இப்படி பற்றுவதற்குக் காரணமாகவும்
காரியங்கள் செய்வதற்குத் துணையாகவுமுள்ள குணங்களெல்லாம்
திரிவிக்ரமன் அவதாரத்திலே ப்ரகாசிக்கையாலே

ஆழ்வாரும்
**தெய்வநாயகன் நாரணன் திரிவிக்ரமன் என்றும்**
**மாண்குறள் கோலப்பிரான் என்றும்**
**அடியை மூன்றை இரந்தவாறும் என்றும்**
**மின்கொள் சேர்புரிநூல் குறளாய் -**
**அகல் ஞாலம் கொண்ட கள்வன்** என்றும் சொல்லுகிறபடியே
சர்வேசுவரனாய்
அடியவர்களிடத்தில் அன்புள்ளவனாய்
மூன்றடி வைத்தலாகிற பெருஞ்செயலைச் செய்கைக்காக
பெரு விலையனான அழகைச் சிறாங்கித்து (திரட்டி)
அநுபவிக்கலாம்படி
வாமன வேடத்தை மேற்கொண்டவனாய்
மஹாபலியினுடைய வேள்விச் சாலையில் சென்று
மூன்றடி என்று இரந்தவனாய்
தான் சொன்னபடியே அவன் செய்யும்படி
காண்பவர் கண்டு வணங்கும்படியனாய்

மனதினைக் கவரும்படியான வடிவைக்காட்டி
வசீகரித்து நின்ற மஹா வஞ்சகனாய்

**காண்மின்கள்! உலகீர்! கண்முகப்பே நிமிர்ந்த**
என்கிறபடியே

நோக்குவித்தை காட்டுவாரைப் போலே
இது ஓர் ஆச்சர்யம் பாருங்கோள்! என்று
உலகமக்கள் எல்லோருடைய கண்ணெதிரே
**அகல்கொள் வையமளந்த மாயன் என்றும்**
**திசை ஞாலம் தாவி அளந்தது என்றும்**
**வையமளந்த மணாளன் என்றும்**
**மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மான் என்றும்**
**ஓரடியால் எல்லா உலகும் தட வந்த என்றும்**
**தாவி வையம்கொண்ட தடந்தாமரைகள் என்றும்**
சொல்லுகிறபடியே

விரிவினையுடையதாய்
திசைகளோடு கூடின பூமியையும் மேல் உலகங்களையும்
தென்றல் உலாவியது போன்று இனிமை பயக்கும்படி
ஒக்கப் பரப்பி அளந்துகொண்ட திருவடிகளை

**எந்நாளே நாம் மண்ணளந்த**
**இணைத்தாமரைகள் காண்பதற்கென்று**
வருகின்றபடியே திருவுலகளந்தருளின
மிக எளிமையான - எல்லையில்லாத இனியனவான
சேர்த்தி அழகுடைய திருவடிகளை
நாம் காண்பது எப்போது என்ற பாரிப்போடு
**இமையோர்கள் ஏத்தி இறைஞ்சி இனமினமா**

**மெய்ந்நா மனத்தால் வழிபாடு செய்** என்கிறபடியே
நித்ய ஸூரிகளும் அநுபவிக்க ஆசைப்பட்டு
நித்ய விபூதியிருலிந்து புறப்பட்டு வரும்படி

**அன்று ஞாலம் அளந்தபிரான் பரன் - சென்று சேர்**
என்கிறபடியே

திருவுலகளந்தருளின செயலாலே

பிரகாசிக்கின்ற பரனாக இருப்பவன், அந்த சிரமம் தீர
விடாயன் மடுவிலே சேருமாப் போலே உகந்து நிற்கின்ற
**திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடம்**
மாமலையிலே கண்டு – அத்திருவடிகளிலே
**அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை**
**உறை மார்பா!**
**நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னை**
**ஆள்வானே!**
**நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும்**
**திருவேங்கடத்தானே!**
**புகலொன்றில்லா அடியேன் உன்அடிக்கீழ் அமர்ந்து**
**புகுந்தேனே.**

என்கிற பாசுர முகத்தாலே
புருஷகாரவடிவான பெரிய பிராட்டியாரை முன்னிட்டு
வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌசீல்யமும் ஸௌலப்யமும்
ஆகிய
அவனுடைய குணங்களை அடைவே சொல்லிக்கொண்டு
**புகலொன்றில்லா அடியேன்** என்று
தம்மிடத்தில் கைம்முதல் இல்லாமையையும்
வேறு கதி இன்மையையும் காட்டி

உன் அடிக்கீழ் என்று
சரணௌ என்றதன் பொருளதான திருவடிகளையும்
அமர்ந்து புகுந்தேனே என்று
ஶரணம் ப்ரபத்யே என்றதன் பொருளையும் சொன்னவராய்
த்வயத்தின் முன் வாக்கியத்தில் கூறியபடி
பூரண ப்ரபத்தியைச் (ஸித்தோபாயவரணம்) செய்தவராய்

கீழ்ப்பத்தில் - பத்துடையடியவரில்
பிணக்கற அறுவகைச் சமயமும் என்கிற பாசுரத்தில்
வணக்குடைத் தவநெறி வழிநின்று என்ற தொடங்கி
வேதப் புனிதனிருக்கை நாவில்கொண்டு
ஞானவிதி பிழையாமே
பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து
அச்சுதன் தன்னை மேவித் தொழுது உய்ம்மினீர்கள்
என்பது முடிய
கீழ்உபதேசித்த ஸாத்ய ஸாதன பக்தியைக் கேட்டவர்கள்
அந்த பரப$_4$க்தி செய்தலின் அருமையையும்
அது ஸ்வரூபத்திற்கு விரோதி ஆம் தன்மையையும்
நினைந்து சோகித்தவர்களாய்
எய்தக் கூவுதல் ஆவதே எனக்கு
என் நான் செய்கேன் என்று இருக்கும் தம்மோடு
ஒத்தவராம்படியான அதிகாரிகளுக்கு

திருவிண்ணகர்ச் சேர்ந்த அப்பன்
தன்னொப்பார் இல்லப்பன் - பொன்னப்பன்
தந்தனன் தனதாள் நீழலே;
திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்கள் அன்றி

மற்றோர் களைகண் இலம் காண்மின்களே என்கிற
தம்முடைய வார்த்தையாலும் (உபதேசத்தாலும்)
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே என்கிற
தம்முடைய அநுட்டானத்தினாலும்
தமக்கு ஸித்தோபாயத்தில் உண்டான
நிஷ்டையைப் ப்ராகாசப்படுத்தி
அவர்களையும் அந்நெறிக்கண் செலுத்துகிறார் ஆறாம்பத்தில்.

## காதலிக்க - நெஞ்சே! நினை -6

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி - ஆறாம்பத்து சாரம்)

வைகல் திருவண்வண்டூர் வைகும் எம் இராமனுக்கு
என் செய்கைதனைப் புள்ளினங்காள் செப்புமென
கைகழிந்த காதலுடன் காரிமாறன் தூதுவிட
மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தெனவே(1) வந்தானாய்
தன்னிலைபோய்ப் பெண்ணிலையாய்த் தான்தள்ளி(2)
"உன்னுடனே
கூடேன்" என்று குருகையர்கோன் கூறிடவே - பெருமானும்
நல்வலத்தால் சினம்தணித்து அவர்தம்மைச் சேர்ந்திட்டு
நண்ணாரை வெல்லும்சீர் விருத்த விபூதியனாம்
தன்பெருமை காட்டக் கண்ட மாறனுமே
எல்லையறத்(3) தானிருந்த அதுதன்னை வாழ்த்திடவும்
குரவை முதலாம் கண்ணன் கோலச் செயல்களையே
இரவுபகல் என்னாமல் என்றும் பரவுமனம்
பெற்றோமென்று களித்துப் பேசிடவும் -அவ்வநுபவத்தில்
துவளற மூழ்கினின்ற மாறன்தன் தொல்நலத்தால்(4)
அதில்மன்னும் உவப்பால் மாலுற்று(5) நாளும்(6)

---

1. காலம் தாழ்த்தி 2. அவனை ஒதுக்கி 3.முடிவில்லாதபடி
4.இயற்கையான பக்தி 5.வ்யாமோஹம் 6.நித்யமாய்ச் செல்கின்ற

துவளறுசீர்த் தம்சீல(7) மெல்லாம் சொன்னவராய்
மாலுடனே தான்கலந்து வாழப் பெறாமையாலே
சால நைந்து தன்னுடைமை(8) அவன் தன்னை
"தானடையக்(9) கோலியே தானிகழ வேண்டாமல்(10)
தம்மடைவே முற்கோலித் தம்மைக் கட்டடங்க
விட்டு அகன்றபடி சொன்னவராய்
உண்ணும் சோறாதி ஒருமூன்றும் எம்பெருமான்
கண்ணனென்றே நீர்மல்கிக் கண்ணிணைகள்
மண்ணுலகில்
மன்னு திருக்கோளூரில் மாயன்பால் போம்மாறன்
பொன்னுலகு பூமியெல்லாம் புள்ளினங்கட்கே அருளி
என்னிடரை மாலுக்கு இயம்புமென - மன்னு
திருநாடு முதலாகத் தூது நல்கிடவும்
நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய - மாலுக்கும்
ஏரார் விசும்பில்(11) இருப்பரிதா ஆராத -
காதலுடன் கூப்பிட்டும் வாரானாய்
உலகுய்ய மால்நின்ற உயர்வேங் கடத்தே
அலர்மகளை முன்னிட்டு அவன்தன் மலரடியே
வன்சரணாய்ச் சேர்ந்தான் மகிழ்மாறன்-தாளிணையே
உன்சரணாய் மாறனை நீ காதலிக்க - நெஞ்சே! நினை

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

7. பெருமானிடத்து ஈடுபட்டமை 8. ஆன்ம, ஆன்மீயம் 9. அடைய - எல்லாம்10. தான்சொல்லப் போகவேண்டியிராமல் 11.வைகுண்டத்தில்

# ஏழாம் பத்து

எண்ணிலாப் பெருமாயனே,
குணங்கள்கொண்ட மூர்த்தி ஓர் மூவராய்ப் -
படைத்து அளித்துக் கெடுக்கும்;
பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்,
ஊழிதோறூழி உருவும் பேரும் செய்கையும் வேறவன்
வையம் காக்கும்,

மாயா வாமனனே,
உள்ளம் பல்யோகு செய்தி என்கிறபடியே
உபாயபூதனாய் இருப்பதற்குரிய எல்லையற்ற எல்லாம் வல்ல
ஆச்சர்யமான ஆற்றலை (ஸர்வ சக்தித்வம்) உடைமையாலே
தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதி செய்யும்;
ஏற்றரும் வைகுந்தத்தை அருளும்-உபாயமாம் தன்மையை

புற்பா முதலாப் புல்லெறும்பு ஆதி ஒன்றின்றியே
நற்பாலுக்கு உய்த்தவனாய்
நாட்டை அளித்து உய்யச்செய்தவனாய்
சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்
திருவடி தாட்பால் அடைவித்தவனாய்ச்
செய்துகாட்டிநின்ற எம்பெருமான் - (கீழ்ப்பத்தில்)

அந்தோ உனபாதம் அகலகில்லேன் இறையுமே,
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே என்று சொல்லிச்
சரணம் புகுந்த (ஆழ்வார்) - தம்மை
அகற்ற வைத்த மாயவல் ஐம்புலன்களாம் அவை நடுவே
வைத்தமைகண்டு

**உண்ணிலாவிய ஐவரால் குமைதீற்றி**
**என்னை உன் பாதபங்கயங்கள் நண்ணிலா வகையே**
**நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்,**
**உன் இணைத்தாமரைகட்கு**
**அன்புருகி நிற்குமது நிற்கச் சுமடு தந்தாய் என்று**
கூறித்துடித்து

**முன் பரவை கடைந்து அமுதம்கொண்ட மூர்த்தியோ!ஓ!**
**விண்ணுளார் பெருமானே! ஓ!**
தேவரீரை ஸித்தோபாயமாகப் பற்றி; பெற்றபலன் இதுதானா? என்று
கலங்காப் பெருநகரமும் கலங்க – அவனுக்கும்
அங்குக் குடியிருப்பு அரிதாய், வந்து விழவேண்டும்படியான
ஆக்ரந்தனத்தோடே கூவிக்கொண்டே
குழந்தை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமாப்போலே
அவன் தலையிலே ஏறிடும்படியான அவனோடே சம்பந்த ஞானத்தாலே
தம் தலையால் வந்ததனையும் அவன் தலையிலே பழியிட்டு
இப்படிக் கூப்பிடவும் ஆற்றல் இன்றிக்கே
ஒரு பிராட்டி நிலையை அடைந்தாராய் மோஹிக்க

**கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளால் இறைக்கும்**
**இட்டகால் இட்டகையளாயிருக்கும்**
**சிந்திக்கும் திசைக்கும்** என்கிறபடியே
இப்படியெல்லாம் இவள் விஞ்சிச் செய்கிற ஆர்த்தியை
இவளது திருத்தாயார் – பெண்பிள்ளையை
பெரிய பெருமாள் திருக்கண் வளர்கிற
கோவில் திருவாசலிலே கிடத்தி – அச்சம் தவிர்ந்து
**திருவரங்கத்தாய்! இவள்திறத்து என் செய்கின்றாய்?**
**என் சிந்தித்தாய்? என் செய்திட்டாய்?**

**என்செய்கேன் என் திருமகட்கே?** என்று
இவள்பொருட்டுக் கேட்கும்படியான பெருந்துன்பமடைந்து
முறைகெட்ட கேள்வியாக்கி வாய்வெருவா நிற்க

திருத்தாயார் வெருவியபடியே பெருமானின்
திவ்யாத்ம, விக்ரஹகுணங்கள் செவிப்படவே - மோஹம்தீர்ந்து
**சேர்வன் சென்று என்னுடைத் தோழிமீர்காள்!**
**அன்னையர்காள்!**
**என்னைத் தேற்ற வேண்டா;**
**கனிந்த விளவிற்கு கன்றெறிந்த கண்ணபிரானுக்கு**
**என் பெண்மை தோற்றேன்** என்று
யாராலும் தேற்றித்தரிப்பிக்க ஒண்ணாதபடி நெஞ்சு பறியுண்டு
பாரதந்த்ர்யத்தை இழந்து கிடக்க

பிரிவாற்றாமையாலே இப்படித் தளர்ந்து கிடக்கிற
ஆழ்வாரைத் தரிப்பிக்க (எம்பெருமான்)
தன் வெற்றிச் செயல்களைக் காட்டிக் கொடுக்க
ஆழ்வாரும் அதனை
**ஆழியெழப்** பதிகத்தாலே பேசி மகிழ்ந்து
**குன்றமெடுத்த பிரானடியாரொடும்**
**ஒன்றி நின்ற சடகோபன்** என்று
அவன் விஜயத்திலே ஈடுபட்டிருக்கும்
ஸ்ரீ வைஷ்ணவர்களோடே பொருந்தித் தேறிநிற்க

அத்தேறிய நிலையும் -அவன் விஜயங்களுக்குப் பற்றாம்
அவனுடைய விபவகுணப் பண்புகள் நெஞ்சில்படவே
**கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ**
என்கிறபடியே

அந்தோ ! ஸர்வ ஸுலப₄னாய் நிர்ஹேதுக க்ருபாளுவான
எம்பெருமானைவிட்டு
விஷயாந்தரங்களைக் கற்று; மண்டி
ஸம்ஸாரிகள் பாழாய்ப் போகிறார்களே என்று
ஸம்ஸாரிகள் இழவை நினைத்த அளவிலே
எம்பெருமான் விஜயத்தாலே ஊட்டப்பெற்ற வலிமை சுவறி
**உண்ணிலாவிய திருவாய்மொழியில்** பண்ணின
அதே ஆக்ரந்த₃னக் கூப்பீடே - மீண்டும்
**பாமரு மூவுலகு படைத்த** திருவாய்மொழியில்
**பத்பநாபா! ஓ! பற்ப பாதா ஓ!**
**தாமரைக் கண்ணா! ஓ!;தாமரைக் கையா! ஓ!** என்று
உலக காரணனாக இருத்தல் முதலிய
அவனுடைய செய்லகளைச் சொல்லி பரிணமித்து நெடுகிச்சென்று
**தனியேன் தனி ஆளா! ஓ!** என்று
விண்ணாட்டிலும் கேட்கும்படி
ஒரு துணையுமின்றிக்கே இருக்கும்
தனிமைக் கூப்பீடாகத் தலையெடுக்க

மீண்டும் - முன்பு அநுபவித்த—எம்பெருமானுடைய முகசோபை
தெளிந்த நினைவிற்குக் காரணமாகி

அந்த முகசோபை கண்டவிடமெல்லாம் தோற்ற
அது தம்மை நலிந்தபடியை
**சூழவும் தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றும் கண்டீர்!**
**ஏழையர் ஆவி உண்ணும் இணைக் கூற்றங்கொலோ!**
**அறியேன்!**
**கண்ணன்கோளிழை வாண்முகமாய் -**
**கொடியேன் உயிர் கொள்கின்றதே!** என்று
"**ஏழையராவியில்**" பேசியவராய் - ஆக இப்படி
எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடவா நிற்க

எம்பெருமானே! சரண்யனான தேவரீருக்கு
ஞானத்திலும் சக்தியிலும் குறையில்லை
சரணாகதனான அடியேன் கைம்முதல் இல்லாதவனாய்
வேறுபுகல் இல்லாதவனாய்
ஆர்த்தியுடையனாய் இருக்கிறேன் - அப்படியிருக்க
**பாசங்கள்நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டிட்டு**
**காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய், பின்னும் நீ**
**மாயங்கள் செய்து வைத்தி! இவையென்ன மயக்குக்களே**
அவித்யை கர்ம வாசனை ருசிகளை
வாசனையோடே (அடியோடே) போக்கி
உனக்கே உரிய அடியவனாகக் கொண்ட பின்பு
பிறப்பு இறப்பு துக்கங்களைக் கொண்ட
ஸம்ஸாரத்தில் வைத்திருப்பதற்குக் காரணமென்ன? என்று
"**மாயாவாமனனே**" யில் எம்பெருமானை மடிபிடித்துக் கேட்க

ஆழ்வீர்! உம்மைக் கருமமடியாக இம்மடவுலகில்
இருத்தினோமன்று
நம் இச்சையாலே காணும் - உம்மைக்கொண்டு
நமக்கும், நம் அடியார்க்கும் போதுபோக்காக,
**உறப்பல இன்கவி சொல்ல** நிறுத்தினோம் என்ன

இது கேட்ட ஆழ்வார்
**இன்கவிபாடும் பரமகவிகளால்**
**தன்கவி தான்தன்னைப் பாடுவியாது இன்று**
**..................என்னால் தன்னை**
**வன்கவி பாடும்** என்று பலரடியார் முன்பருளிய
**பாம்பணையப்பன்** கருணையை நினைந்தால்
**என் சொல்லி நிற்பனோ? எந்நாள் சிந்தித் தார்வனோ?**
**பார்விண் நீர் முற்றும் கலந்து பருகிலும் ஆர்வனோ?**
**இறப்பு எதிர் காலம் பருகிலும் ஆர்வனோ?**
என்று சொல்லி வியந்தவராய் - அதற்கு
**உதவிக் கைம்மாறு என்னுயிர் என்ன உற்று எண்ணில்**
**அதுவும் மற்று ஆங்கவன் தன்னது; என்னால் தன்னை**

**பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு**
**எதுவும் ஒன்றுமில்லை செய்வது இங்குமங்கே என்று**
உபயவிபூதியிலும் கைம்மாறு இலாமை சொல்லி
செய்ந்நன்றி அறிதலோடு கூடியவராகி – அதனை
**"என்றைக்கும் என்னை"**-திருவாய்மொழியாலே வெளியிட்டு

எம்பெருமான் தன்பாட்டுக் கேட்பது
**மிதிலைச்செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள்**
**செம்பவளத் திரள்வாய் தன்சரிதை கேட்டான்**
என்கிறபடியே
குசலவர்கள் இராமாயணம் கேட்பித்தாற் போல் ஆகாமல்
**இன்பம் பயக்க எழில்மலர் மாதரும் தானும்**
**இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து**
**நிலத்தேவர் குழு வணங்கும் சிந்தைமகிழ்**
**திருவாறன்விளைத்** திருப்பதியிலே என்று அறுதியிட

எம்பெருமானும் – இவர் – திவ்யதேசத்தையே பற்றி
திருவாய்மொழி கேட்பிப்பதில் ஊன்றியிருக்கிறாரா? அல்லது
பரமபதத்திலும் கால் வைத்திருக்கிறாரா? என்பதைச் சோதிக்க
'ஆழ்வீர்! உமக்கு நீர் கேட்ட மேல்வீடு தருகிறோம்' என்ன
ஆழ்வாரும் சடக்கென

**நீணகரமதுவே மலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை** —
**நீணகரம்** – வைகுண்டம் ஆகியபேறு
**திருவாறன்விளை** ஆகிய திவ்ய தேசமே என்றும்
அதனை அடையும் வழி
**ஆயிரம் தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலம்**
அங்கு எழுந்தருளியிருக்கும்

உஷையையும் அநிருத்தனையும் சேர்ந்தவனான
கண்ணபிரானாகிய
அர்ச்சாவடிவினன் திருவடிகளே என்றும் சொல்லி
**திருவாறன்விளை தீர்த்தனுக்கு அற்றபின் சிந்தை**
**மற்றொன்றின் திறத்தல்லாத் தன்மை தேவபிரான்**
**அறியும் என்று**
தமக்குப் பரமபதத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய்
ஸாமகான கோஷ்டியையும் பரமபதத்தையும் உபேக்ஷித்து
திவ்யப்ரபந்த கோஷ்டியையும் திவ்யதேச வாசத்தையும்
அர்ச்சாவடிவையுமே தாம் போர உகந்தமை சொல்லி
(தம் அர்ச்சாவதார ஊற்றத்தை நிலைநாட்டி)
ஸம்ஸாரிகளும் திவ்ய தேச வாசமே பேறு என்றும்
திவ்யதேசத்து எம்பெருமான்களே கதி (வழி) என்றும்
**உள்ளித் தொழும் தொண்டராக**
நிலைநிற்கும்படி தலைக்கட்டுகிறார் ஏழாம் பத்தில்

## காதலிக்க – நெஞ்சே! நினை –7

**(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி – ஏழாம்பத்து சாரம்)**

**"உண்ணிலா(1) ஐவருடன்(2) இருத்தியிவ் வுலகிலென**
**எண்ணிலா(3) மாயனெனை(4) நலியவே**
**எண்ணுகிறான்"–என்றே**
**கங்குல் பகல் ஆற்றாமை கைவிஞ்சி மாறனுமோர்**
**நாயகியாய் ஓலமிட்டு மோஹமுறப் – பெண்ணணங்கை**
**கோவில் திருவாசலிலே இட்டுவைத்து**
**"என்செயநீர் எண்ணுகின்றீர்" என அரங்கரிடம்**

---

1.உள்ளேயிருக்கின்ற 2.பஞ்சேந்திரியம் 3.எண்ணற்ற
4.குணசேஷ்டிதங்கள் உடையவன்

முறைகெட்ட கேள்வியாக்கி திருத்தாயார் அரற்றிநிற்க
அரற்றுங்கால் சொல்லியஅவன் வெள்ளிய(5) நாமங்கள் -
கேட்டு மோஹமது விட்டகல மாறனுமே
தெள்ளியமால் திருப்பேர்நகர் சென்றுபுகும் ஆசை
உள்ளமங்கே பற்றிநின்ற தன்மைசொல்ல-மாலனுமே
தன்விசய மானவவை முற்றுங் காட்டிற்றாய்
"வாழிதனால்" என்று உகந்து தேற்றி நிற்க
ஊழிலவை(6) இன்றுபோல் கண்டுரைத்த மாறனுமே
கற்றோர் கருதும்(7) விசயங்கட் கெல்லாம்
பற்றாகும் விபவகுணப் பண்புகளை உற்றுணர்ந்து
மண்ணி லுள்ளோர் தம்மிழவை வெறுத்துரைத்துப்
பாமருவு வேதம்பகர் மால்குணங்கள் ஆம்அழகு
வேண்டப்பாடு(8) ஆமவற்றைத் தூமனத்தால் நண்ணி(9)
அவன்தன்னைக் காணவே நன்குருகிக் கூப்பிடவே
ஏழையர்கள் நெஞ்சை இளகுவிக்கும் மாலழகு
சூழவந்து தோன்றித் துயர்விளைக்க, மாறனுமே
ஆழுமனம் தன்னுடனே அவ்வழகைத் தானுரைத்து -
அதுகண்டும் மாயாமல் தன்னைவைத்த வைசித்திரியாலே(10)
தீமுதலாம் விசித்திரமாய்ச் சேர்பொருளோடு ஓயாமல்(11)
வாய்ந்து நிற்கும் மாயன் வளம்(12) காட்டக் கண்டுரைத்து
"என்றனைநீ இங்கு வைத்தது ஏதுக்கென?" மாலனுமே
"என்றனுக்கும் எந்தமர்க்கும் இன்பமதாநன்றுகவி -
-பாட" எனக் கேட்ட மாறன் அதுதனக்குத்

---

5.போக்யமான 6.என்றோ நடந்தவை 7.தியானிக்கப்படும் 8.பெருமேன்மை
9.தெளிந்த மனத்தால் அநுபவித்து 10.விசித்திரத்தன்மை 11.எப்பொழுதும்
12. விபூதிவிஸ்தாரம்

தன்னுயிரைக் கைம்மாறாக்க - ஆங்கதுவும்
அவனுடைமை ஆகையாலே கைம்மாறிலாமை சொல்லி
இன்பக்கவி பாடுவித்தோனை இந்திரையோடு(13) அன்புற்றுவாழ்
திருவாறன்விளைத் திருப்பதியில் துன்பறக்கண்டு (14).

அந்நிலையில்

அவ்வடிமை விழைமாறன் திருக்கழல்கள் திண்டிறலோர்
யாவர்க்கும் தேவு(15) ஆகும், ஆதலினால்
மாறனைநீ தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே! நினை

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

13.பிராட்டி 14.வருத்தம் தீரக்கண்டு 15.தெய்வம்

# எட்டாம் பத்து

**தேவிமாராவர் திருமகள் பூமிஏவ மற்று அமரர் ஆட்செய்வார்**
**மேவிய உலகம் மூன்றும் அவை ஆட்சி என்றும்**
**பணியா அமரர் பணிவும் பண்பும் தாமேயாம் என்றும்**
**நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன் என்றும்**
**நல்ல கோட்பாட்டு உலகங்கள் மூன்றினுள்ளும்**
**தான் நிறைந்த என்றும்** சொல்லுகிறபடியே
பெரியபிராட்டியார் முதலிய தேவிமார்கட்கு நாயகனாய்
தனக்கேயுரிய ஸர்வ சக்தி யோகத்தாலே
(எல்லாவிதமான ஆற்றலுடைமைப்பண்பு)
தேவிமார், அமரர், இடம், இனியபொருள்கள், கருவிகள்
ஆகியவற்றை உடையனான
**ஸத்யகாமன்** (எப்பொழுதும் உள்ளனவான பொருள்களை
உடையவன்)
என்று சொல்லப்படுகிற சர்வேசுவரன்

தன்னைக் கவிபாடும்படி தானிட்ட பணியையும்
அவர் மறக்கும்படியாக

ஆழ்வார் பாரிப்புக்குச் சேர விரைந்து முகங்காட்டமையாலே
**காணுமாறு அருளாய் என்றென்றே கலங்கி** என்கிறபடியே
**கலக்கமும்**

**உமர்உகந்து உகந்த உருவம் நின்னுருவமாகி**
**உன்தனக்கு அன்பரானார் -**

**அவர் உகந்து அமர்ந்த செய்கை**
**உன் மாயை அறிவொன்றும் சங்கிப்பன்** என்று
தன் அடியார்க்குப் பரதந்திரப்பட்டிருக்கும்
அவன் குணத்தின் கண்ணும்

**இறந்ததும் நீயே, எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ**
**நீ இன்னேயானால் -**
**சிறந்த நின்தன்மை அது இது உது என்று -**
**அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்** என்று
தான் சரீரியாய், பிற எல்லாம் சரீரமாய்
அவற்றின் நல்லது தீயதுகளைத் தன்னதாகவே கருதும்
அவன் ஸ்வரூபத்தின் கண்ணும் - **ஐயமும்**

**நன்றும் அஞ்சுவன் நரகம் நானடைதல்** என்று
சேஷத்வ ஞானத்தை அழிப்பதற்கு ஹேதுவாக இருக்கும்
ஸம்ஸார தோஷங்களை நினைக்க **அச்சமும்** கொண்டு நிற்க

இப்படி இருக்கும்படியான ஆழ்வாரை - அவர்கொண்ட
**கலக்கமும், ஐயமும் அச்சமும்** போக்கி
தரிப்பிக்க நினைத்த எம்பெருமான் - ஆழ்வீர் !
**மலரடிப்போதுகள் உம்நெஞ்சத்து**
**எப்போதும் இருத்தி வணங்க**
**பலர் அடியார் முன்பு அருளினோமே!**
அதனை மறந்தீரோ?
இன்னமும் பல செய்வோம் என்ன

தாள்களையே தனக்கே தலைத்தலைச்
சிறப்பத் தந்த பேருதவியென்று அதனை நினைந்து
அதற்குக் கைம்மாறு செய்ய நினைந்தாராய் – கீழ்

**உதவிக் கைம்மாறு என்னுயிர் என்னவுற்று - எண்ணில்**
**அதுவும் மற்று ஆங்கு அவன்தன்னது**

**-------------------------------என்னால் தன்னை**
**பதவிய இன்கவிபாடிய அப்பனுக்கு**
**எதுவும் ஒன்றுமில்லை செய்வது இங்குமங்கே** என்று
முன்பு தேறிய நிலையையும் மறந்து

வேந்தர் தலைவன்
**இயம் ஸீதா மம ஸுதா ஸஹத₄ர்மசரீ தவ ।**
**ப்ரதீ₃ச்ச சைநாம் பு₄த்ரம் தே**
**பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா ॥**
என்று சொல்லி கன்யாதானம் செய்தது போல
**பேருதவிக் கைம்மாறா தோள்களை ஆரத்தழுவி**
தம் உயிரை அறவிலை செய்து நிற்க

பெருமாளும் பிராட்டியைப் பெற்று
**அதீவ ராம: ஶுஶுபே₄** என்று விளங்கினாற் போல
**சோதீ!** என்று இவரே கண்டு வியக்கும்படி உஜ்வலனாய்

இவர் தம்மதல்லாத ஒன்றைத்
தம்மதாக மயங்கிக் கொடுத்தாற்போல – அவனும்
தன்னதல்லாத ஒன்றைப் பெற்றாற்போல மயங்கி

**தோள்களாயிரத்தாய்! முடிகளாயிரத்தாய்!**
**துணை மலர்க் கண்கள் ஆயிரத்தாய்!**
**தாள்கள் ஆயிரத்தாய்! பேர்களாயிரத்தாய்!** என்னும்படி
திருமேனி பூரித்து நின்ற எம்பெருமான் -

ஸ்ரீ ஜனகராஜன் திருமகள் பெருமாளைக் கைப்பிடித்த பின்பு
ஸ்ரீமிதிலையை நினையாது இருந்தாற்போலே - இவரும்
**பாதம் அடைவதன் பாசத்தாலே**
**மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டும்**

பெருமான் வடிவழகிற்குப் பிராட்டி
**ஆத்வார மநுவவ்ராஜ மங்களாந்யபித$_{3}$த்$_{4}$யுஷீ** என்று
மங்களாசாசனம் செய்தாற்போலே - இவரும்
**ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார்** என்று
பெருமாளின் ஸௌகுமார்யத்திற்குப் பரிந்தும்

பிராட்டி பெருமாளுடைய வீரம் முதலியவற்றை நினைந்து அச்சமின்றி
**துல்ய ஶீல வயோ வ்ருத்தா$_{4}$ம் துல்யாபி$_{4}$ஜநலக்ஷணாம்**
என்கிறபடியே
பெருமாளோடு கூடி அநுபவித்தாற்போலே - இவரும்
**வார்கடா அருவி** என்று தொடங்கிப் பெருமாளுடைய
வீரம் முதலியவற்றை நினைந்து அச்சம் நீங்கியவராய்
**அமர்ந்த மாயோனை முக்கணம்மானை**
**நான்முகனை அமர்ந்தேனே** என்று
பெருமானோடு பொருந்தி அநுபவித்தும்

பெருமாளின் பிரிவில் பிராட்டி

**ஹிமஹுதநலிநீவ நஷ்ட ஶோபா$_4$ வ்யஸந பரம்பரயா**
**(அ)திபீட்$_3$யமாநா**

**ஸஹசர ரஹிதேவ சக்ரவாகீ ஜனகஸுதா க்ருபணாம்**
**த$_3$சாம் ப்ரபந்நா என்று**

ஈர நெஞ்சு இல்லாதவரும்
இரங்கும் நிலையை அடைந்தாற் போலே – இவரும்
**காண வாராய் என்றென்றே கண்ணும் வாயும் துவர்ந்து**
கண்டார் இரங்கும் நிலையுற்றும் – ஆக இப்படியே
பிராட்டி குணங்களெல்லாம் ஆழ்வார்பக்கல் இருக்கக் கண்டு

**ப்ரியாது ஸீதா ராமஸ்ய தா$_3$ரா: பித்ருக்ருதா இதி**
**கு$_3$ணாத் ரூபகு$_3$ணாச்சாபி ப்ரீதி: பூ$_4$யோப்$_4$யவர்த்தத**
என்கிறபடியே

தந்தையாரால் திருமணம் செய்விக்கப்பட்ட மனைவி
என்ற காரணத்தாலும்
குணங்கள், திருமேனி அழகு, நற்குடிப் பிறப்பு முதலியவற்றாலும்
பிராட்டியிடத்து பெருமாளுக்கு அன்பு வளர்ந்தாற் போலே
பொற்காரியாராலே ஆத்ம விவாஹம் செய்விக்கப்பட்டபடியாலும்
ஆத்மகுணபூர்த்தி முதலியவற்றாலும் ஆழ்வாரிடத்தில் ப்ரீதி
வளர்ந்ததாகி

**மநஸ்வீ தத்$_3$க$_3$தஸ்தஸ்யா: நித்யம் ஹ்ருதி$_3$ஸமர்ப்பித:**
என்கிறபடியே

எப்போதும் பெருமாள்
பிராட்டி நெஞ்சிற்கு இனிதாம்படி இருந்தாப் போலே
**உருவு கரந்து உள்ளுந்தோறும் தித்திப்பானாய்**

ஒருக்கடுத்து உள்ளுறையும் பிரானாய்
இருந்தான் கண்டு கொண்டு என்கிறபடியே
வறியன் நிதிபெற்றால்
அதனையே பார்த்துக்கொண்டிருக்குமாப் போலே
ஆழ்வாரைப் ப்ரீதியாலே வைத்தகண் மாறாமல் பார்த்துக்கொண்டே
அவர் உள்ளத்தில் நித்யவாஸம் பண்ணி

ஸமா த்₃வாத₃ஶ தத்ராஹம் ராக₄வஸ்ய நிவேஶநே
பு₄ஞ்ஜாநா (அ)மாநுஷான் போ₄கா₃ந் ஸர்வகாம
ஸம்ருத்திநீ என்கிறபடியே

பிரிந்த காலத்தும்
முன்பு நடந்த செயல்களையே சொல்லிக்கொண்டு தரிக்கலாம்படி
பிராட்டியை - மனித போகமன்றி திவ்யமான தேவ போகங்களை
பெருமாள் அநுபவிக்கச் செய்தாற்போலே - இவரையும்
தரும்தான் அருள்தான் இனியான் அறியேனே என்றும்
செவ்வாய் முறுவலொடு என் உள்ளத்திருந்த
அவ்வாய் அன்றியான் அறியேன் மற்றருளே என்றும்
ஆழ்வார் ஈடுபட்டுப் பேசும்படி
தேவ போகங்களை அநுபவிப்பித்தவனாய் நிற்க - ஆழ்வாரும்

இருந்தும் வியந்தும் என்கிற திருவாய்மொழியில்
மருள்தான் ஈதோ என்றும்
பின்னை யார்க்கு அவன் தன்னைக்கொடுக்கும் என்றும்
அருள்தான் இனியான் அறியேன், அவன் என்னுள்
இருள்தான் அற வீற்றிருந்தான் என்றும்
எம்பெருமானருளை உகந்து வியந்துபேசியவராய் - மீண்டும் ஆழ்வார்
சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் தன்

நெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தான் என்று தம் சிறுமையை நினைக்கப் புக்கவாறே - பெருமானும்

கீழ் "வளவேழுலகில்"

**களவேழ்வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! என்பன்**
**அருவினையேன்**
**வணங்கினால் உன்பெருமை மாசூணாதோ?**
**அடியேன் காண்பான் அலற்றுவன் இதனின் மிக்க**
**அயர்வுண்டே?** என்றும்

"**பொருமா நீள்படையில்**"

**சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்!** என்றும்

"**அந்தாமத்தன்பில்**"

**அல்லாவி உள்கலந்த,**
**என் முடிவு காணாதே என்னுள் கலந்தானை** என்றும்

"இப்படியே ஆழ்வாருக்கு நம்மைவிட்டும் பிரிய ஹேதுவான நைச்சியம் மும்முறை -மூன்று தத்துக்களாக ஏற்பட அதனைப் போக்கினோம் -
மீண்டும் இவர் தம் சிறுமையையே நினைந்து
அகலில் என் செய்வது?
வந்தேறியான சரீர சம்பந்தத்தையிட்டு அன்றோ
நைச்சியம் **பா**வித்து நம்மை அகலப்பார்க்கிறார்;
சரீரம் வேறு - ஆன்மா வேறு என்ற உண்மையை உணர்த்தினால் அகலமாட்டாரன்றோ" என்று நினைத்து
நமக்குக் கௌஸ்துபம் போலேயும் ஸ்ரீதனம் போலேயும்
ஒளிதருவதுமாய் இனியதுமாய் நித்யமுமாய்
பிரிக்கமுடியாத விசேஷணமுமாய்க்காணும் இருப்பது
உம்முடைய ஆன்மாவின் தன்மை என்ன -ஆழ்வாரும்

யானும் தானாய் ஒழிந்தான் என்றும்
தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து
என்றும்

சென்று சென்று பரம்பரமாய் என்றும்
நன்றாய் ஞானம் கடந்துபோய் என்றும்
எம்பெருமானைவிட்டுப் பிரிக்கமுடியாத விசேஷணமாய்
எல்லையில்லாத இனிய பொருளாய்
சரீர இந்திரியங்களுக்கு வேறுபட்டதாய்
ஞானானந்தமயமாய் இருப்பது ஆன்மா என்று உணர்ந்து

புனையிழைகள் அணிவும் ஆடையும் புதுக்கணிப்பும் -
நினையும் நீர்மையது அன்று இவட்கிது
நினைக்கப்புக்கால்,
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்;
அன்றி மற்றோர் உபாயம் என்?
இவள் அம் தண்ணந்துழாய் கமழ்தல் என்று
பிராட்டிக்கு ஒக்கச் சொல்லலாம்படி
எம்பெருமானுக்கே உரியது (அநந்யார்ஹம்) என்று
தம் நிலையாலே விளக்கிக்காட்டி - அதற்கும் மேலாக

மாகாயாம் பூக்கொள்மேனி நான்குதோள்
பொன்னாழிக்கை என்னம்மான்
நீக்கமில்லா அடியார் தம்மடியார்
அடியார் அடியார் எம்கோக்கள்
அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடு
ஊழிதோறூழி வாய்க்க தமியேற்கே என்று
ஆத்ம ஸ்வரூபஎல்லைநிலமும் உணர்ந்து, அதனையே அபேக்ஷித்து

தம்முடைய உபாய உபேயங்களே தமக்கும் என்றிருக்கும்
அடியவர்கள்
கீழ்ப்பத்தில் உபதேசித்தபடி - உபாயத்தின் எல்லை நிலம்
அர்ச்சாவதார எம்பெருமான் என்றும் பேற்றின் எல்லை நிலம்
அவன் சம்பந்தம் பெற்ற திவ்யதேசம் என்றும்
இருகரையர் ஆகாதபடி
**கோவிந்தன் மண்விண் முழுதும் அளந்த ஒண்தாமரை**
**மண்ணவர் தாம்தொழ, வானவர் தாம்வந்து**
**நண்ணு திருகடித்தானத்தை**
**ஏத்த நில்லா இடரே, குறிக்கொண்மின்!**
**இடர்கெட உள்ளத்துக்கொண்மின்!** என்கிறபடியே
துக்கமெல்லாம் தொலைப்பதாயும்
மானஸ ஞானத்திற்கு விஷயமாயுள்ள அவனே உகக்கும்
திருகடித்தானத்தை
நெஞ்சிலே கொண்டு சிந்தியுங்கோள் என்பதினாலே
பேறும் வழியும்
திருகடித்தானம் போன்ற திவ்ய தேச சம்பந்தமே என்று நிறுவி
தம் அடியார் திவ்யதேசம் ஒன்றிலேயே ஈடுபடும்படி செய்து
தலைக்கட்டுகிறார் எட்டாம் பத்தில்

## காதலிக்க - நெஞ்சே! நினை-8

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி - எட்டாம்பத்தின் சாரம்)
**திருவாறன்விளைத் தேவானவன் விரைய வந்து**
**முகங்காட்டிக் கைங்கர்யம் கொள்ளப் பெறாமையாலே**
"மேவும் அடியார் வசமாம் அவன் மெய்நிலை"(1)
"யாவையும் தானாம் நிலை" (2) **ஆகுமவன் குணமதிலே**
**மாறனுமே சங்கை கொள்ள - மாலனுமே**
"**ஆழ்வீர் ! பலரடியார் முன்பு அருளினோமே!**
**தாள்களையே தலைத்தலைச் சிறப்புத் தந்த**

1. அடியவரிட்டவழக்கு தான் 2. சேதனாசேதனங்களை தரிப்பவன்

பேருதவி எனச் சொன்னீரே ! மறந்தீரோ?" இன்னும்
நன்றுபல செய்குவம் உந்தமக்கென்ன
சங்கை தீர்ந்த மாறனுமே எம்பெருமான்
முன்னம் வந்து உதவாமைக்குக் காரணம்தான்
"இங்கிவற்றில்(3) உள்ள நசை ஒழியோம்" என்றே
ஐயம்தான் கொண்டுளானோ? என்றே எண்ணி
"பாத மடைவதன் பாசத்தாலே மற்றவன் -
பாசங்கள் முற்ற விட்டோம்" என்று உறுதிசொல்ல
நசையொழிப்புச் சொன்னபோது அவன்தன்
திவ்யமங்கள விக்ரக வைலக்ஷண்யம் கண்டதாலே
அங்கு(4) அமரர்பேண அவர்நடுவே வாழ்
திருமாற்கு இங்கு பரிவரில்லை என்றே அஞ்ச-அவனும்
"எங்கும் பரிவருளர்" என்று அச்சம் போக்கி
வந்தவச்சம் மறுவலிடாதபடி(5) பண்ணுகைக்கு
தன்வலியும் பரிவர் சேர்த்தியும் பாருமென
பரிவராம் அரனுடைத் திருச்செங் குன்றூரில்
நின்றநிலை காட்டிடவே நெஞ்சாற் கண்டு அம்
மானஸீக அநுபவமாம் வடிவழகை நேரில்காண
வல்விடாய் அறவிஞ்ச அழுதலற்ற
தூயபுகழ் மாறனது எல்லிபகல் நடந்தவிடாய்
தீருகைக்கு மெல்லவந்து தான்கலக்க வேணுமென்று
நல்லவர்கள் மன்னு திருக்கடித்தானத்தே மாலிருக்க-மாறனுமே
திருகடித் தானத்திருந்த அவனைக் கண்டு மனமகிழ
அவனுமிவர் எண்ணமெலாம் திருந்த இவர்திறத்து
அருள்செய்து பொருந்தக் கலந்து இனியனாக - மாறனுமே

---

3.உலகியலில் 4. வைகுண்டத்தில் 5.மீண்டும் தலைதூக்காதபடி.

அவன்கலந்தநெறி கட்டுரைக்க;கண்ணிறைய வந்து
கலந்தமாலும் இக்கலவி திண்ணிலையாக வேணுமென-இவர்
தண்ணிது வெனும்(6) ஆருயிரின்(7) ஏற்றங் காட்ட -
மாறனுமே
"தெருளும் மருளும் மாய்ந்தோம்"எனத் தாழ்ச்சி(8) போக்கி
கருமால் திறத்தொரு கன்னிகையாய் - ஒருமாகலவி
உரைப்பால் திடமாக "உயிரந்நியருக்காகாது"
உன்தனக்கே ஆகுமென "அநந்யார்ஹம்" காட்டி
அது தனக்குக் கொல்லைநிலம்(9) மாலழகு நீள் குணத்தில்
ஈடுபடுமா(10) நிலையுடைய அடியார்க்கடிமை
என்றே அறுதியிட்டு, அது தன்னில் எல்லை நிலம்
தானாக வேண்டுமென பரம புருஷார்த்த
நிலைநின்ற மாறன்தன் தாளிணையே நந்தமக்கு
உற்றதுணை என்றுநெஞ்சே ஓர் -ஆதலினால்
மாறனைநீ தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே! நினை

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

6.சிறியதாக ஆழ்வார் பேசின 7. ஆன்மாவின் 8.நைச்சியம் 9.இதற்கு மேல் இல்லை என்னலாம்படி 10. மா - உன்னதமான

# ஒன்பதாம் பத்து

**எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான்**
**அவனே அகல் ஞாலம் படைத்து இடந்தான்,**
**அவனே அஃது உண்டு உமிழ்ந்தான், அளந்தான்**
**அகலிடம் படைத்து, இடந்து, உண்டு உமிழ்ந்து -**
**அளந்து எங்கும் அளிக்கின்ற ஆயன்**
**ஆலின்மேல் ஆல் அமர்ந்தான்** என்கிறபடியே
ஆபத்சகனான (ஆபத்துக்குத்துணையான) சர்வேசுவரன்

"**இருந்தும் வியந்தும்**" என்கிற திருவாய்மொழியில் ஆழ்வாருக்குத்
தன்னொடு கலந்த கலவியை நினைப்பூட்டின அளவிலே
அவன் தட்டுமாறிக் கலக்குமதான
ஶீல குணத்தில் ஆழங்காற்பட்டு
**ஆருயிர்பட்டது எனது உயிர்பட்டது -**
என்னுயிர் பட்டதனை நித்யஸூரிகள்தாம் பட்டனரோ? என்று
கூறும் படியான நிலையை அடைந்தவராய்

எம்பெருமானை மேல்விழுந்து அநுபவித்த
தம்முடைய ஆன்மாவின் தன்மையை–(கீழ்ப்பத்தில்) எம்பெருமான்
உள்ளபடி காட்டக் கண்டதற்குப் பலன்
அவ்வான்மாவிற்குத் தக்கதான பேற்றினை அநுபவித்தல் ஆகையாலே
**பண்டை நாளாலே** என்கிற திருவாய்மொழியில்
**தொண்டரோர்க்கருளிச் சோதிவாய் திறந்து**
**உன்தாமரைக் கண்களால் நோக்காய்;**
**பாத பங்கயமே தலைக்கு அணியாய்;**
**உன் தாமரை மங்கையும் நீயும்**

**இடங்கொள் மூவுலகும் தொழ இருந்தருளாய்**
**நின்பல் நிலா முத்தம் தவழ்கதிர் முறுவல் செய்து**
**நின் தாமரைக் கண் தயங்க நின்றருளாய்** என்று – இப்படி
தொடர்ந்து வருகின்ற அநுபவங்களை ஆசைப்பட்டு
காலக்ரமத்தில் இவையெல்லாம் வாய்க்குமென்று
ஆறியிருக்கப்பெறாமல்

**வடிவிணை இல்லா மலர்மகள்**
**மற்றை நிலமகள் பிடிக்கும்**
**மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க**
**நீ ஒருநாள் கூவுதல் வருதல் செய்யாயே** என்று
அழுது புலம்பி யாசிக்கும்படி ஆசையை வளரவிட்டு
**மாக வைகுந்தம் காண்பதற்கு என்மனம்**
**ஏகம் எண்ணும் இராப்பகல் இன்றியே** என்று
பரமபதத்தைக் காண்பதையே ஸர்வகாலமும் ஏகரூபமாக மநோரதித்து
**சுடராழி சுரிசங்கம் ஏந்தும் கையா!**
**உன்னைக் காணக் கருதும் என் கண்ணே** என்று
தம் ஆசைப்பாட்டைத் தெரிவித்து
அவனை நினைப்பூட்டும் பொருள்களைக் காண்கையில்
நோவுபடுகையாலே
**ஏழஎண்ணி நாமும் நம்வானநாடனோடு ஒன்றினோம்**என்று
முடிந்துபோக முயன்று ஒருப்பட்டு

**திருக்காட்கரை மருவிய மாயன்தன் மாயம்**
**நினைதொறும் உருகுமால் நெஞ்சம்** என்கிறபடியே
அவன் அநுபவிக்கும்போது பரிமாறின
ஶீலம் முதலிய குணங்களை நினைக்குந்தோறும்
அநுபவத்திற்குக் கருவியான நெஞ்சமும் சிதிலமாய்க் கரைய

தமரோடு அங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே என்று
தூது அனுப்பும் முகத்தாலே
கிளிமொழியாள் அலற்றிய சொல் என்று
ஆற்றாமையாலே முறைகேடாகக் கூப்பிட்டு
கவையில் மனமின்றிக் கண்ணீர்கள் கலுழ்வன் என்கிறபடியே
இரு தலைத்த நெஞ்சு இன்றிக்கே
ஒன்றிலேயே நோக்கான மனத்தினையுடையராய்

பதினாலு ஆண்டுகள் பொறுத்திருந்த பரதாழ்வான்
ஒரு நாளில்பட்ட வருத்தமும்
பத்து மாசம் பொறுத்திருந்த பிராட்டி
ஒரு மாதத்தில் பட்ட வருத்தமும்
ஒரு பகலெல்லாம் பொறுத்திருந்த கோபியர்கள்
ஒரு மாலை நேரத்தில்பட்ட வருத்தமும்
இவையெல்லாம் ஒருசேர ஆழ்வாருக்கு
ஒரு நொடிப்பொழுதில் ஆம்படி நிற்க

அவனைவிட்டு அகல்வதற்கே இரங்கி
அணிகுருகூர்ச் சடகோபன் மாறன் என்கிற
அவருடைய பதற்றத்திற்கு ஈடாக
காமுகர்க்குப் பத்தாவது தசையிலே மரணம் ஆமாறு போல
நம்பக்கல் பரமபக்தியுடைய உமக்கு
நம்மைப் பெறாவிடில் முடியும்படியான பரமதசை
பிறக்கப் போகிறது – ஆகையாலே
நாம் நம்மை உமக்குக் காட்டிக்கொடுக்கிற
காலவிளம்பம் இனி இல்லை
நாள் கடலைக் கழிமினே என்கிறபடியே

பதினான்கு ஆண்டுகளின் முடிவில் என்று
நம்பி பரதாழ்வானுக்கு நாளிட்டது போல்
ஒருநாள் ஒரு கடல் ஆகாமல் – நாச்சியாருக்கு
நாளை வதுவை மணம் என்று நாளிட்டபடியே
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் என்று
எம்பெருமான் நாளிட்டுக் கொடுக்க

மகிழ்ச்சி கொண்ட ஆழ்வார்
தம் நல்லுரைகளைக் கேட்டுத் திருந்தியவர்கள் போக
அல்லாதாரையும் விடமாட்டாத தம்முடைய பேரருளாலே
இம் மட உலகோர்க்கு

கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை என்றும்
துணையும் சார்வும் ஆகுவார்போல் சுற்றத்தவர் பிறரும்
அணைய வந்த ஆக்கமுண்டேல் அட்டைகள் போல்
சுவைப்பர்;
பொருள் கைஉண்டாய்ச் செல்லக் காணில் போற்றி
என்று ஏற்றெழுவர்
இருள்கொள் துன்பத்து இன்மைகாணில் என்னே?
என்பாருமில்லை,
அரணமாவர் அற்ற காலைக்கு என்றென்று
அமைக்கப்பட்டார்
இரணங்கொண்ட தெப்பராவர் இன்றியிட்டாலும் அஃதே
என்றும்
சதுரம் என்று தம்மைத் தாமே சம்மதித்து இன்மொழியார்
மதுர போகமது உற்றவரே வைகி மற்றொன்றுறுவர்
என்றும்

**இல்லை கண்டீர் இன்ப மந்தோ! உள்ளது நினையாதே**
**தொல்லையர்காள் எத்தனைவர் தோன்றிக்**
**கழிந்தொழிந்தார் என்றும்**
**யாதுமில்லை மிக்கதனில் என்றென்று அது கருதி**
**காது செய்வான் கூதை செய்து கடைமுறை**
**வாழ்க்கையும் போம் என்றும்**
எம்பெருமானையொழிந்தார் பந்து, ரக்ஷகர், போக்யர்,இனிமை, உபாயம், ஆகாமைகாட்டி - ப்ரளய ஆபத்ஸகனானவனே பரம பந்து, எளியனாய் ரக்ஷணத்திற்கேற்ற குணங்களை உடையவனே பரம ரக்ஷகன், ஒருபடிப்பட நெடுகின ஸ்நேகமுடையவனே பரம போக்யன் - அவனே வடமதுரைப் பிறந்தான் அவனைப்பற்றுவதே பரமயினிமை அவனே பரம உபாயம் **ஆதுமில்லை மற்றவனில்** என்று எடுத்துச் சொல்லி

**மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம்-மாநிலத்து**
**எவ்வுயிர்க்கும் சிற்ற வேண்டா**
**சிந்திப்பே அமையும் கண்டீர்கள்** என்று
எல்லோரும் செய்தற்குரிய எளிய செயலாய்
பற்றுதற்கு எளியதுமாய் இருப்பதான -
**மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ** என்று
அவன் தேர்த்தட்டில் உரைத்தபடியே -
**கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்**
**வடமதுரைப் பிறந்தான்தன் குற்றமில் சீர்கற்று**
**வைகல் வாழ்தல்** என்று
உளதாகிய அவனுடைய குணங்களை
அநுபவிப்பதற்கு உறுப்பான - **ஸித்தோபாயமாக** -
கண்ணனைச் சிந்தித்திருத்தலையே உபதேசித்தும்

**ஸக்ருதே₃வஹி ஶாஸ்த்ரார்த்த₂: க்ருதோயம் தா₄ரயேந்நரம்**

**நராணாம் பு₃த்₃தி₄தௌ₃ர்ப₃ல்யாத் உபாயாந்தரமிஷ்யதே**

என்கிறபடியே

அந்த ஸித்தோபாயத்தில் மகாவிசுவாசம் பிறப்பதற்கு அடியான புண்யமில்லாத

நம்பிக்கையோடு இருத்தல் – முதலிய நிலைகளைக்

கடைப்பிடிக்க முடியாத சிற்றறிவினை யுடையோர்க்கு

**மாலை நண்ணித் தொழுதெழுமினோ**

**காலை மாலை கமல மலரிட்டு நீர் இறைஞ்சுமின்**

**தனதன்பர்க்கு அன்பனாகும்** என்று

அங்கத்தோடு கூடிய பக்தி யோகத்தை உபதேசித்தும்

பக்தியோகத்தின் அருமை

அது காலம் தாழ்த்திப் பயன் கொடுத்தலுக்கு அஞ்சுதல்

ஆகிய காரணங்களால்

அதனைச் செய்ய ஆற்றல் இல்லாதவர்க்கு

**சரணமாகும் தனதாள் அடைந்தார்க் கெல்லாம்**

**மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்** என்று

எல்லாவற்றையும் விடுமதனால் பெறுவதும்

செய்தற்கு எளியதும், எல்லார்க்கும் உரியதும்

சரீரத்தின் முடிவிலே பலத்தைக் கொடுப்பதுமான

ப்ரபத்தியை உபதேசித்தும்

உபாயம் சிறிதாய் பலன் பெரிதாய், தடைகளும் பலவாய் இருக்க

எங்ஙனம் கூடும் என்று ஐயமுடைய

அந்தப் ப்ரபத்தியை நம்புவதற்கு உடலான

அறிவின் ஆற்றல் இல்லாதவர்க்கு
**திருக்கண்ணபுரம் சொல்ல நாளும் துயர் பாடுசாராவே**
என்று
சொல்வதையே பற்றாசாகப் பிடித்து
அவனே திருத்திக் கொள்ளும்படி
வாயாரத் துதிக்க வேண்டியது என்று உபதேசித்தும்

உச்சாரணத்திற்கும்
தானாக ஒரு பாசுரமிட முடியாமையாலே
கீழ்ச் சொன்ன உபாயங்களில் எல்லாம்
தகுதி இல்லாதவர்க்கு
அன்பினால் தூண்டப்பட்டவராகி
**இப்பத்தும் பாடி ஆடிப் பணிமின் அவன்தாள்களே**—
பாடியாடி அவன் திருவடிகளில் விழுங்கோள் என்று உபதேசித்தும்

ஆக இப்படியே
கீதாசார்யன் பரமக்ருபையாலே
**நெறியெல்லாம் எடுத்து உரைத்தாற்** போலே – ஆழ்வாரும்
தமக்குப் ப்ராப்தி அணித்தானவாறே
ஸம்ஸாரிகள் ஒருவரும் இழக்க வொண்ணாது என்கிற
பரம க்ருபையாலே
அவரவர்களுடைய நிலைக்குத் தகுதியாக
பேற்றிற்குரிய உபாயங்கள் எல்லாவற்றையும்
உபதேசித்துத் தலைக்கட்டுகிறார் ஒன்பதாம் பத்தில்.

## காதலிக்க - நெஞ்சே! நினை-9

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-ஒன்பதாம்பத்தின் சாரம்)

கொண்டபெண்டிர் தாம்முதலாக் கூறும் உற்றார்
கன்மத்தால் அண்டினவரென்றே அவரை விட்டுத்
தொண்டருடனே சேர்க்கும் திருமாலைச் சேருமென
ஆர்க்கும் ஹிதம் பார்க்கும் புகழ்மாறன்
பண்டை(1) உறவான பரனைப் புளிங்குடிக்கண்டு
என்தனக்கு எல்லா உறவின் காரியமும்
தண்டறநீா(2) செய்தருளும் எனவிரப்ப- மாலனுமே
ஓராநீா வேண்டினவை(3) உள்ளதெல்லாம் செய்குவம்
"நாராயண னன்றோ நாம்"என்றே பேருறவும் சொல்ல
அவன் சீலத்தில் கால்தாழ்ந்த மாறனுமே
மையார்கண் மா(4) மார்பில் மன்னும் மாதவனைக்
கையாழி சங்குடனே காணவெண்ணி; மெய்யான
காதலுடன் கூப்பிடவே, கூப்பிட்ட குரலுக்கு
மாலனுமே அவா்தமக்குத்(தன்) குணாநுபவம் தந்துநிற்க
"இன்னுயிர்மால் தோற்றிநின்றது என்நெஞ்சிலன்றோ!
கண்ணாலே அவன்தன்னை நேர்காண வேண்டாவோ?"
என்ற நினைவாலே ஆண்பெண்ணாய் அவன்தன்னை
நினைவிப் பவற்றால் தான் தளர்ந்து - பெருமானே!
"உருகுமால் என்னெஞ்சம் பெருகுமால் வேட்கை" யென
மருவுகின்ற இன்னாப்போடு அவன்சீா் ஏய்ந்துரைத்து
தம் காதலுக்கு அடியான மாலேய்ந்த வடிவழகே
பற்றாசாக ஆங்கு அவன்பால்
எங்குமுள புள்ளினத்தைத் தூதாகப் போகவிட
அறுக்குமிடர் என்றங்கு அவன்பால் விட்ட தூது

---

1.அநாதிஸித்தமான 2. குறையாதபடி 3.ஆராய்ந்து விரும்பியவை
4.மா - பெரியபிராட்டியார்

மறித்துவரப்(5) பற்றா(6) மனத்தாலே அறப்பதறி
அவை மீண்டு வருமளவும் ஆற்றாமை பொரவிஞ்ச(7)
மையலினால் செய்படியும் அறியாமல் மாறனுமே
செய்யதிரு நாவாயில் செல்ல நினைந்தவராய்-அவர்தம்மை
"கண்ணாரக் கண்டு களிக்கின்றது என்றுகொல்?
மல்லடிமை செய்யுநாள் என்றுகொல்?" என்றே
அவன்தனையே கேட்டிட்டு அவன் சொல்லுமளவும்
பற்றாத(8) தொன்னலத்தால்(9) ஆற்றாமை பேசி
அலமந்த மாறனுக்கு "மன்னுடம்பின் முடிவில்
உம்வாஞ்சை முற்றும்; சால நண்ணிச் செய்குவம்" என்ன
உகந்தானும்(10) நம்தமக்கும் இன்னுயிர் உய்ந்திடவே
கணபுரத்தே சேருமெனப் பணித்தனனே-அம்மாறன்
அருளன்றிப் பிறிதொன்றுண்டோ நந்தமக்கு
உற்றகதி- ஆதலினால்
மாறனை நீ தாள்தொழுது காதலிக்க-நெஞ்சே! நினை

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

5.மீண்டு வருமளவும் 6.பொறுமையிலாத 7.எல்லை கடந்து அதிகரிக்க
8. பொறுக்காத 9. இயல்பானபக்தி 10.மகிழ்ந்த மாறனும்

# பத்தாம் பத்து

**சுரிகுழல் கமலக்கட்கனி வாய்**

**அஞ்சன மேனி**

**புனல் மைந்நின்ற வரை போலும் திருவுருவம்**

**பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கம்**

**புனல்காயா நிறத்த புண்டரீகக் கண் செங்கனிவாய்**

என்கிறபடியே

சோபையோடு கூடிய அவயவங்களையும்

அவற்றிற்குப் பொருத்தமான திருநிறத்தையுமுடைய

**காமரூபம் கொண்டு எழுந்தளிப்பான்** என்கிறபடியே

அடியார்களின் ஆபத்தினைப் போக்குவதற்குத் தகுதியாக

வேண்டியபடி மேற்கொள்ளும் உருவங்கட்கெல்லாம்

மூலமாக இருக்கும் திவ்ய திருமேனியைக்கொண்டு

ஸம்ஸாரத்தின் அடிக் கொதிப்பாலும்

தன் திருவடி கிட்டப்பெறாமையாலும்

அடியார்படும் துன்பத்தினைப் போக்கும்

**ஆர்த்திஹரத்வம்** உடையனான சர்வேசுவரன்

**அவனுடை அருள்பெறும்போது அரிதால் என்றும்**

**அவன் அருள் பெறுமளவும் ஆவி நில்லாது என்றும்**

சொல்லும்படி

அவன் அருளைப் பெறுதலில்

நொடிப்பொழுதும் விளம்பம் பொறாதபடி

நாளேலறியேன் என்று புலம்பித்

துன்புற்ற ஸ்வாமி நம்மாழ்வாருக்கு

**மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்** என்று
அணித்தாக நாளிட்டுக்கொடுக்க

**வானேற வழிதந்த வாட்டாற்றான்** என்று
பரமபதம் சேர அவன் காட்டிய அர்ச்சிராதி வழிக்கு –

ராஜகுமாரன் வழிபோம் போது – வழிக்குக்கடவர்
முன்னோடி – நிலம் சோதித்து – நிழலும் தடாகமும் பண்ணி
– பாதேயத்தோடு
அழைத்துக்கொண்டு போம் மரபாமாப் போலே

திருமோகூர் ஆத்தன்
**அண்ட மூவுலகளந்தான்** – ஆகையாலே
உலகளத்தல் வியாஜத்தாலே முன்னோடி நிலம் சோதிப்பவனாய்
**அவன் அடிநிழல் தடம்** – என்கிறபடியே
தன் கால் விழுந்த இடத்தே
நிழலும் தடாகமும் ஆகச்செய்பவனாய்
அவன் **மோஹனக்ஷேத்ரவாசி** ஆகையாலே
மோஹினி அவதாரமெடுத்து தேவர்களுக்கு அமுதமளித்ததுபோலே
**பாதே$_2$யம் புண்டரீகாக்ஷ நாமசங்கீர்த்தனாம்ருதம்**என்று
அர்ச்சிராதி வழி போவார்க்கு உணவாகத்
தன் திவ்ய குணாம்ருதத்தைப் பொழியுமவனாய் – அவனே
**தயரதன் பெற்ற மரகத மணித்தடம்** – ஸ்ரீராமன்
**கூத்தன் கோவலன்** – ஸ்ரீ கிருஷ்ணன் – ஆகையாலே
பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் போல இருந்துள்ள திரளை
அர்ச்சிராதி வழியாலே
தானே துணையாக நடத்தினானாய் விளங்கும்படியாலே – ஆழ்வாரும்
**திருமோகூர்ஆத்தன் தாமரையடியன்றி மற்றிலம் அரண்**

திருமோகூர்க் காளமேகத்தையன்றி மற்றொன்றிலம் கதி என்று
தானே வழித்துணையாம் காளமேகத்தைக் கதியாக்கி

ஸுப்ரபாதா ச மே நிஶா என்கிறபடியே
நாமுமக்கு அறியச்சொன்ன நாள்களும் நணியவானஎன்று
தமக்கு அந்த நாள் அணித்தானபடியைப் பிறர் அறியப் பேசி

துணைபிரிந்தார் துயரம் நினைகிலை
பசு மேய்க்கப் போகேல்; என்கை கழியேல் என்று
தமக்குத் துணைவந்த திருமோகூர்க் கோவலனை
அவன் விரும்பிப் போகிற பசுநிரை மேய்ப்பு ஒழியத்தடுத்து

மீள்கின்றதில்லை; பிறவித்துயர் கடிந்தோம் என்றும்
நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன் என்றும்
ஸம்ஸாரதுக்கம் இனிமறுவலிடாது என்று நிச்சயித்து
ந பி$_3$பே$_4$தி குதஶ்சந
ஆனந்தமயமான பரம்பொருளைத் தியானிப்பவன்
எங்கும் அச்சம் கொள்கிறானில்லை – என்கிறபடியே அஞ்சாதவராகி

பகவத் ப்ராப்தி தப்பாது என்று துணிந்தவர்கள்
மரணதசை வந்த அளவிலே
புதைந்து கிடக்கும் மஹா நிதிகளை
மகன் முதலானோர்க்குக் காட்டுமாப் போலே
ஆழ்வாரும் – ஒருவரும் இழவாதபடி
நலம் தீங்குகளை அறிவிக்கவேண்டும் என்று கருதி
தம்மைக்காட்டிலும் பகவத் விஷயத்தில்
முந்துற்ற தம் நெஞ்சிற்கு உபதேசமுகமாக

**பணி நெஞ்சே நாளும், பரம பரம்பரனை**
**வாழி என் நெஞ்சே! மறவாது வாழ்கண்டாய்**
**மருள் ஒழி நீ மடநெஞ்சே; நரகத்தை நகு நெஞ்சே**
**வாழி மனமே! கைவிடேல் —**
நெஞ்சே! நம்முடைய தடைகளை எல்லாம் தானே போக்கி —
அடிமைகொள்ளும் பரமபுருஷனை அநுபவிக்கப்பார்!
அநுபவித்தலாகிய இவ்வாழ்வு மாறாதே சென்றிடுக!
கைபுகுந்தது என்று மற்ற விஷயங்களில் செய்யுமதனை
இவ்விஷயத்திலும் செய்யாதே
**திருவாறன்விளையதனை**
**மேவிவலம் செய்து கைதொழக்கூடுங்கொல் என்கிறபடியே**
உகந்தருளின நிலங்களின் நசையாலே
இங்கேயே அடிமை செய்ய அமையாதோ? என்று
மயங்குவது ஒன்று உண்டு உனக்கு ; அதனைத் தவிரப்பார்
நாம் பரமபதத்திற்கு ஏறப்போகிறோம்
நெடுநாள் நம்மைக் குடிமக்களாக்கி எளிவரவுபடுத்தின
இவ்வுலக வாழ்வினைப் புரிந்து பார்த்துச் சிரித்துப் போருகிடாய்
நமக்கு இப்பேறு திருமலையாலே வந்தாயிற்று
அத்திருமலையை விடாதேகொள் என்று
தம் திருவுளத்திற்குச் செய்வன தவிர்வன விதித்து

அத்திருவுளம் போலே அந்தரங்க ஸ்ரீவைஷ்ணவர்களை
**தொண்டீர்! வம்மின்** – என்று அழைத்து
**கொண்ட கோயிலை வலம் செய்து**
**இங்கு ஆடுதும் கூத்தே** என்று செய்யத்தக்கதும்
**எண்ணுமின் எந்தை நாமம்** என்று நினைக்கத்தக்கதும்
**பேசுமின் கூசமின்றி** என்று சொல்லத்தக்கதும்

**நமர்களோ சொல்லக் கேண்மின்** என்று கேட்கத்தக்கதும்
**படமுடை அரவில் பள்ளிபயின்றவன்** -
**பாதம்காண நடமினே** என்று பார்க்கத்தக்கதும் செல்லத்தக்கதும்
**அனந்தபுரநகர் புகுதுமின்றே** என்று வாசம் பண்ணத்தக்கதும்
ஆகியவையெல்லாம் அவர்க்கு அறிவுறுத்தி

**பிணக்கற அறுவகைச் சமயமும்** – என்கிற திருவாய்மொழியில்
**வணக்குடைத் தவநெறி** என்று
முதலில் தொடங்கின பொருளான பக்தியோகத்தை
ஈற்றில் முடித்தல் சாஸ்திரவிதியாகையாலே
**சார்வே தவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்**என்கிறபடியே
அந்தத் தவநெறியாகிய பக்தி யோகத்திற்கு
அவன் தாள்களைக் கட்டவே
ப்ராப்திக்கு விரோதியானவையெல்லாம் தொலையும் என்று
பேற்றோடு பொருந்தினபடியைச் சொல்லி

முதல் பத்தில் – அந்த பக்தியோகத்தில்
பஜனம் செய்வதற்குப் பற்றுக் கோடாகச் சொல்லப்பட்ட
**எண்ணும் திருநாமமான**
**வண்புகழ் நாரணன்** –என்கிற திருமந்திரத்தினுடைய
சொல்லையும் பொருளையும்
**நாரணம்** என்றும் **நாரணன் எம்மான்** என்றும்
எளிதில் உணரும்படி சுருங்க உபதேசித்தும்

த்வயத்தின் முன் வாக்கியத்திலும் பின் வாக்கியத்திலுமுள்ள
**ஸ்ரீமத்** - என்னும் பதங்களைத் திருவுள்ளம் பற்றி
**மாதவன் என்றென்று ஓதவல்லீரேல்** என்று

கீழ்ச் சொன்ன **நாரணன்** என்ற பதத்தோடே
**மாதவன்** என்ற சொல்லை
இருமுறை சேர்த்துச் சொல்ல வல்லீர்களாகில் என்கையாலே
அந்தத் திருமந்திரத்தினைத் தெளிவாகச் சொல்லக்கூடிய
**த்வயம்** –என்ற மந்திரமாக வெளியிட்டும்

சர்வேசுவரன் தம்மைக் கொண்டு போகைக்கு விரைகையாலும்
கேட்கிறவர்களுக்கு எளிதாகச் சுருக்கமாகச் சொல்லவேண்டியும்
**தாள்வாய் மலரிட்டு நாள்வாய் நாடீர்**
**நாடீர்! பாடீர்! அவன் நாமம்**
**சுனை நன்மலரிட்டு நினைமின் நெடியானே** என்று
மனம் வாக்கு காயம் முக்கரணங்களாலும்
பகவானை அடைதலாகிற செயலை
சுருங்க அநுஷ்டிக்கத்தக்க ப்ரயோக வ்ருத்தியாக்கி
கையோலைசெய்து கொடுக்குமாறு போலே
ஸம்ஸாரிகளுக்குக் காட்டிக்கொடுத்தும்

அநுபவ கைங்கர்யங்களில் தமக்குத் தோள்தீண்டியானவர்களை
**செஞ்சொற் கவிகாள்!** என்று விளித்து
அவனுடைய ஶீலகுணத்தில் அழுந்திப் போகாமல்
**உயிர்காத்து ஆட்செய்ம்மின் —**
" உம் உயிரை நோக்கிக் கொண்டு (நைச்சியம் காட்டி)
இறாய்த்து ஓடாமல் **உன்தன் திருவுள்ளம்**
**இடர்கெடுந்தோறும் நாங்கள்வியக்க இன்புறுதும்**
என்று சொல்லி அவன் தன் தனிமை போக்கி **ஆளும்ஆள**
அவனை உளனாகச் செய்யுங்கோள்" என்று உபதேசித்து
வஞ்சக்கள்வன் உயிர்கலந்து அழிக்கும்
வழிக்குக் காவலிட்டும் நிற்க

பெருமானோ – “வளவேழுலகில் – ஆழ்வார்
தம் அயோக்யதையைச் சொல்லி அகலப்பார்க்க
அவரை நம் ஶீலகுணத்தைக்காட்டி
**தீர்ந்து நம்பால் மனம்வைக்கத் திருத்தினோம்;**
இவர் இங்கே இருக்கில், மீண்டும் நம்மைவிட்டு அகலுவர்”என்று
அகலவொண்ணாத தேசத்திற்குக் கொண்டு போக எண்ணியவனாய்
ஆழ்வார் வருகையை முன்னிட்டு
**வீடு திருத்துவான்** போய்–அதுசெய்து மீள்வதற்குள்–ஆழ்வார்
**ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்**
**அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றும்படி**
தம் உபதேசத்தால் உலகமடங்கத் திருத்தி நிற்க

பரமபதம் கோடிக்கச் சென்ற எம்பெருமான் மீண்டு
**வந்துநின்று விண்ணுலகம் தருவானாய் விரைய**
வந்த பதற்றத்திலே – தான் காண்பது
ஆழ்வாருடைய சரம சரீரமாகையாலே
அதிலே தனக்குண்டான வ்யாமோகத்தாலே
அதனை இழக்க ஒண்ணாதவனாய்
அது ப்ராக்ருதம் என்பதையும் நினையாதவனாய்
**வேர்சூடுவார் மண்பற்றுப்போலே**
**குடிகொண்டான்** என்று பரிவாரங்களோடு கூடியவனாகி
**மாயை யாக்கை** – என்று
ஆழ்வார்தாமே குந்தியிட்டுச் சரக்குக்கட்டி
புறப்பட்டு நிற்கிற சரீரத்துக்குள் புகுந்து
**நெஞ்சும் உயிரும் உள்கலந்து**

தானநகர்கள் என்று தனக்கு வாஸஸ்தலமான
திவ்யதேசங்களில்பண்ணும் விருப்பத்தையெல்லாம்
ஆழ்வாருடைய ஒவ்வொரு அவயவங்களிலும் பண்ணி
எல்லாம் இதுக்குள்ளேயாக வகுத்து - திருக்குரவையில்
பெண்களோடே பலபல திருமேனிகளைக்கொண்டு
அநுபவித்தாற் போலே ஆழ்வாருடைய
அவயவங்கள்தோறும் அநுபவியா நிற்க - ஆழ்வாரும்

தம் திருமேனியில் காதல் கொண்ட அவனுக்கு
**பொங்கைம்புலனும் பொறி ஐந்தும்**
**கருமேந்திரியம் ஐம்பூதம்**
**இங்கு இவ்வுயிர் ஏய் பிரகிருதி**
**மான் ஆங்கார மனங்களான**
**உன் மாயை மங்க ஒட்டு** என்று
தம் திருமேனியின் குற்றமறிவித்து
இதில் ஆசையைவிட்டுத் தொலைக்க வேணும் என்று
அவனைக் கால்கட்டிப் ப்ரார்த்திக்க;அவனும் உடன்பட்டு விட

**மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை** என்று
அசித் சம்பந்தத்தை அறுத்து
**வானே தருவான் தனக்காய்** நின்ற
**கருத்தின்கட் பெரியனாகிய மஹாநுபாவனை நோக்கி**

**இன்றென்னைப் பொருளாக்கித்**
**தன்னை என்னுள் வைத்தான்!**
**அன்றென்னைப் புறம் போகப் புணர்த்தது**
**என்செய்வான்?** என்று
மடிபிடித்துக் கேட்க - அவனும்
நாம் எப்படியெல்லாம் சமாதானம் கூறினால் - ஆழ்வார்
எப்படியெல்லாம் மறுப்பார் என்று தன்னுள் எண்ணிப்பார்க்க
பெருமான் எண்ணியபடி என்? என்னில்

ஆழ்வீர்!
**தூராக்குழி தூர்த்து எனைநாள் அகன்றிருப்பன்**
**அற்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்றொழிந்தேன்**
என்கிற உம் வாக்குப்படியே இந்திரியங்களின் வசப்பட்டு
விஷயப்ராவண்யராய் அகன்றது உம் செயலே என்ன

பெருமானே! இந்திரியங்களை இட்டு மயக்கி வைத்தது யார்?
**இன்னமுதெனத் தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க**
**நீ வைத்த முன்ன மாயம்**; - வேண்டாதாரை
**அகற்ற நீ வைத்த மாய வல்ஐம்புலன்கள்அல்லவா** ? என்ன

ஆழ்வீர் ! இந்திரியங்களை இட்டு வைத்தது என்னதேயானாலும்
அதன்வழிச் சென்றதற்குக் காரணம் மூன்று குணங்களோடு கூடின
உம்முடைய சரீர சம்பந்தமென்ன

**அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்;**
**அது நிற்கச் சுமடு தந்தாய்** என்கிறபடியே
அச்சரீர சம்பந்தமும் தேவரீர் தந்ததன்றோ என்ன

ஆழ்வீர்! அதற்கு அடி உம்முடைய
**முன் செய்த முழுவினை** – புண்ய பாபரூப கருமங்களென்ன

எம்பெருமானே! கருமங்கள்
அறிவில்லாதவை - ஆற்றலற்றவை - அழிந்து போமவை
அவை தாமே இயங்கா
**துயரமே தரு துன்ப இன்ப வினைகளாய்;**
**உற்ற இரு வினையாய்** - என்கிறபடியே
உம்முடைய சீற்றம், அருள்வடிவாகக்

கருமங்கள் பலிக்குமவையாகையாலே
கருமங்களும் தேவரீரிட்ட வழக்கே – என்ன

ஆழ்வீர்!
**ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல்!**
**மதியிலேன் வல்வினை மாளாதோ!** என்கிற
உம்முடைய வாக்குப்படியே
கருமங்கட்குக் கர்த்தாவும் போக்தாவும் நீரேயன்றோ! என்ன.

பெருமானே!
**தான் ஆங்காரமாய்ப்புக்கு தானே தானே ஆனான்-**
என்கிறபடியே
ஆன்ம – ஆன்மீய அபிமானி தேவரீர் – ஆகையாலே
**கருமமும் கரும பலனுமாகிய காரணனும்** தேவரீரே
(புண்ய பாபரூப கருமங்களைச் செய்தலும் அவற்றின் பலனை அநுபவித்தலும் உம் அதீனம்)
உமது படியை அநுகரித்துப் பேசுங்கால்
**செய்கைப் பயன் உண்பேனும் யானே** என்று
கர்ம பல போக்தாவும் தேவரீரே என்று பாடியிருக்கிறேனே –என்ன

ஆழ்வீர்!
**யானே என்னை அறியகிலாதே யென்றனதே யென்றிருந்தேன்,**
**எஞ்ஞான்றும் நாமிருந்திருந்திரங்கி நெஞ்சே —**
**மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி** என்று
உம்முடைய அஞ்ஞானம் அந்யதாக்ஞானம்
கர்த்ருத்வ போக்த்ருத்வங்களுக்கு அடி என்று பேசியிருக்கிறீரே – என்ன

**மயக்கா வாமனனே!**
**அயர்ப்பாய்த் தேற்றமுமாய்** என்கிறபடியே
ஞானமும் அஞ்ஞானமும் (தெளிவும் மறப்பும்) தேவரீரிட்ட வழக்கே
**மாட்டாத பல சமய மதிகொடுத்தவர்** தேவரீர்
**உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட** உபாயங்கள் செய்தவர் தேவரீர்

ஆகையாலே
அஞ்ஞானம் அந்யதாக்ஞானம் விளைக்கையும்
**மயர்வற மதிநலம் அருளுகையும்**
உம்முடைய செயலே என்ன
ஆக எப்படி வினவினாலும் ஆழ்வார் சமாதானம்
சொல்லக்கூடும் என்பதை ஊகித்தவனாய்
அவரின் தெளிந்த மெய்ஞ்ஞானம் இருந்தபடியை
எண்ணிப்பார்க்க –
அஃது இருந்தபடி என்? என்னில்

சித் அசித்துக்கள் நமக்குச் (எம்பெருமானுக்கு) சரீரம் என்பதை அறிவர்.

**யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பவிழ்ந்தும் மூதாவியில் தடுமாறும் உயிர் முன்னமே** என்கிறபடியே
சரீரத்தைப் பற்றிக் கிடக்கிற
ஜீவனுக்குரிய சைதன்யம் (அறிவு)
**யாதானும் பற்றி நீங்கும் விரதம்** என்கிறபடியே
ப்ரக்ருதி ப்ராக்ருதங்களின் வழியே போய்

(உடல்புலன்களின் வழியே உலகியல் பொருள்களைப் பற்றிக்கொண்டு)
நம்மைவிட்டு (எம்பெருமானை) நீங்குமே ஒழிய
உய்ந்து போகைக்குத் துணை போகாது என்பதையும் அறிவர்.

நமக்கு அந்தரங்க சரீரம் ஒவ்வொரு ஆன்மாவும்;
நாம் அதன் அபிமானி - என்ற மெய்யறிவுடையராய்
**அகமேனி ஒழியாமே** - என்று
நமக்கு அந்தரங்க சரீரமான அவ்வான்மாவின் ஸ்வரூபம் குலையாதபடி
ப்ரக்ருதி, ப்ராக்ருத சம்பந்த–பிறவி–அழுக்கைப் போக்குதல்
அபிமானி க்ருத்யம் - நம் கடமை - என்பர்.

**நல்கித்தான் காத்தளிக்கும் பொழிலேழும் வினையேற்கே**
**நல்கத்தான் ஆகாதோ நாரணனைக் கண்டக்கால்**
என்கையாலே
அன்பு முன்னாகக் காப்பதற்கு அடியான
நாராயணனாக இருக்கும் தன்மையால் வந்த சம்பந்தம்
ஒரு காரணம் பற்றி யல்லாமல்
நமக்கு இயல்பாகவே அமைந்த ஒன்று என்பதையும் அறிவர்

**தனிமாப்புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த்**
**தான்தோன்றி** என்று
நம்மைக் கவி சொன்னவராகையாலே
நம்முடைய ஸௌஹார்த்த குணம் காரணமாக
தன் கார்யம் (ஜீவாத்மாக்களுக்கு நன்மைகளை)
நாமே செய்யவேண்டும் என்பதையும் அறிவர்.

**பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும்**
**பேதியாததோர் கணக்கில் கீர்த்தி வெள்ளக்**
**கதிர் ஞான மூர்த்தியினாய் என்று**

நம்முடைய ஞான, சக்தி நிறைவினை நன்கு அறிவர். – அவற்றில் குறைவு சொல்லி இவர் கேள்விக்கு விடை மழுப்ப முடியாது.

**ஏகமூர்த்தி இரு மூர்த்தி மூன்று மூர்த்தி பல மூர்த்தியாகி**
**ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி**
**நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே உன் ஆகம்**
**முற்றும் அகத்தடக்கி ஆவி அல்லல் மாய்த்ததே**
என்கிறபடியே

சர்வகாலமும் திருவருள் புரிதலையே
சிந்தித்திருப்பதற்கு அடியான சம்பந்தமுடைய நாம்
நம் திருமேனிக்கு வேண்டிய போ$_4$கோ$_3$பகரணங்கள் எல்லாம்

**பூசும்சாந்து என்நெஞ்சமே புனையும்கண்ணி எனதுடைய**
**வாசகம்செய் மாலையே வான் பட்டாடையும் அஃதே**
**தேசமான அணிகலனும் என் கை கூப்புச் செய்கையே**
**ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த எந்தை ஏகமூர்த்திக்கே**
என்கிறபடியே

தன்பக்கல் உண்டாக்கி நம் துக்கம் தீரப்பெற்றோம் என்று
பேசியவர் ஆகையாலே
உயிர்களைப் பெற முயலுகையும்
பெற்றால் உகக்கும் பயனும் நமக்கே உரியது என்றறிவர்.

இவ்வுலகம் எல்லாம் அழிந்த அன்று
ஸத் என்னும் சொல்லுக்குப் பொருளாய் நின்று
**ருத்$_3$ரம் ஸமாச்ரிதா தே$_3$வா: ருத்$_3$ரோ ப்ரஹ்மாண மாச்ரித:**

**ப்₃ரஹ்மா மமாச்ரிதோ ராஜந்! நாஹம் கஶ்சித் உபாச்ரித:**
என்கிறபடியே

**தனி நின்ற சார்விலாமூர்த்தி**
“பற்றுக்கோடு வேண்டாதபடி, நாம் வேண்டிற்றுச் செய்யும் தடையில்லாத ஸ்வாதந்தர்யம் உடையோம் நாம்” என்று
நம்மை உணர்ந்தவர்

**அவனே அகல் ஞாலம் படைத்து இடந்தான்** ..........................
**அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே** என்கையாலே
சித் அசித்துக்களுடைய ஸ்வரூபம் நிலைபேறு எல்லாமே
நம் அதீனம் என்று தாமறிந்தமை காட்டியவர்.
ஆக இப்படியே ஆழ்வாரின் ஸ்வரூப ஞானத்தெளிவும் அறிந்தவராய்

**நெறிகாட்டி நீக்குதியோ? நின்பால் கருமா**
**முறிமேனி காட்டுதியோ? மேல் நாள் - அறியோமை**
**என் செய்வான் எண்ணினாய்? கண்ணனே! ஈதுரையாய்!**
என்றும்

**அருகும் சுவடும் தெரிவுணரோம்;**

**அன்பே பெருகும் மிக; இதுவென்? பேசீர்!** என்றும்
முன்பு கேட்ட கேள்விகளுக்கு
தன்னுடைய நிரங்குச ஸ்வாந்தர்யத்தைக்(தடையிலா
உரிமை)

காரணம் காட்டலாமாயினும்
அதனையும் மேலாளிப்புச் செய்வது தன்னுடைய
பரமகாருணிகத்வம் ஆகையாலே
பதில் சொல்லாது நின்றானாய்ப் போலே
இப்பொழுதும் பதில் சொல்லாதவனாய்,

அக்குறையை மறைப்பிக்க - எம்பெருமான்
ஆழ்வார் செல்லவிருக்கும்
அர்ச்சிராதிகதி, வரவேற்பு, உபசார, முழக்க கோலாஹலங்கள்,
தன்னைக் கிட்டி பூர்ணானந்தம் எய்தியமை - இவற்றை
மானசீகமாக ஆழ்வாருக்குக் காட்டிக்கொடுக்க
ஆழ்வாரும்

**சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கின**
**ஆழ்கடல் அலை திரை கையெடுத்தாடின**
**கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்**
**காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் இசைத்தனர்**
**வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர்**
**தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர்** - ஆக இவை
தம் பரமபதப் புறப்பாட்டுக் கோலாஹல முழக்கங்கள் ஆக அமைய

**நன்னீர் முகில் பூரண பொற்குடம் உயர்விண்ணில் பூரிக்க**
**நீரணி கடல்கள் நின்றார்க்க**
**உலகர்கள் நெடுவரைத் தோரணம் நிறைக்க**
**தூப நல் மலர் மழை பொழிவனர் தொழுதனராக**

**முனிவர்கள்**
**வைகுந்தற்கு வழி இது-எழுமின்-என்றிசைக்க**
(எழுமின் - எச்சரிகை)

**எதிரெதிர் இமையவர் இருப்பிடம் வகுக்க**
**கதிரவர் அவரவர் கைநிரை காட்ட**
**'மாதவன் தமர்' என்று வாசலில் வானவர்**
**போதுமின் எமதிடம் புகுதுக என்ன**
**வேத நல் வாயவர் வேள்வி உள்மடுக்க**
**மருதரும் வசுக்களும் தொடர்ந்தெங்கும்**
**தோத்திரம் சொல்ல இப்படியே**

ஆதிவாஹிகளின் உபசாரங்களோடே அர்ச்சிராதி வழியே

குடியடியார் இவர் 'கோவிந்தன் தமக்கென்று
முடியுடை வானவர் முறை முறை எதிர்கொள்ள
கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகி
வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
(திருவாசல் காப்போன்)
'வைகுந்தன் தமர்-எமர்-எமதிடம் புகுதுக என்ன

வைகுந்தத் தமரரும் முனிவரும் வியக்க
நல்வேதியர் பதியினர் பாங்கினர் பாதங்கள் கழுவ
நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும்
மதிமுக மடந்தையர் ஏந்த
(பிரானும் பிராட்டியும்) முந்துற்று வந்தவர் எதிர்கொள
மாமணி மண்டபத்து
அந்தமில் பேரின்பத்து அடியரோடும் (நித்யஸூரிகளோடும்
தம்மோடு பொருந்திய ஸ்ரீ வைஷ்ணவர்களோடும்)
ஆனந்த பூர்ணராய்த் தாமும் இருக்கும்படியைத்
தம் ஞானக் கண்ணால் கண்டு
அதனை உண்மையாகவே பெற
தலைமேல் தாளிணைகள் என்கிறபடியே
மனத்தினுடைய அநுபவத்தெளிவாலே
தலைமேல் ஆகும்படி வந்த திருவடிகளை இறுகப்பற்றித்
தலைமிசையாய் வந்திட்டு இனிநான் போகலொட்டேன்
என்று போகாமல் தடுத்து
திருவாணை நின்னாணை கண்டாய் - என்று
அவன் பேற்றைத்தர மறுக்கவொண்ணாதபடி ஆணையிட

ஆழ்வீர்! அடியவரான நீர் - உம்மை அடிமை கொண்ட

நாம் செய்தபடி இருக்கவேண்டுமேயொழிய
நம்மை ஆணையிட்டுப் பேற்றைப் பெற நினைப்பது
உம் ஸ்வரூபத்திற்குத் தகாது **இது பெறாஅ ஆணை**-என்ன

பெருமானே!
**நேசம் செய்து உன்னோடு என்னை**
**உயிர் வேறின்றி ஒன்றாகவே**
**கூசம் செய்யாது கொண்டாய்**-அதற்குப் பொருளென்ன?
உம்மை அடியேனுக்கு அநுபவிக்கப் பண்ணவேண்டும் – என்ற
நோக்கம் தானே! அஃதின்றேல் – தேவரீர் செய்கை
கூசம் செய்யாது செய் பிழையல்லவா?

**ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால்**
**அறிகின்றிலேன் நான்**
அடியேனுடைய கைம்முதல் – "வேறுபுகலின்மை" பாரீர்!

**என்பரம் சாதிக்கலுற்று என்னைப் போரவிட்டிட்டாயே!**
என் கார்யம் தேவரீரே செய்வதாகச் சங்கல்பித்துப் பின்
கைநழுவ விடுதல்
உமக்கு நீக்க ஒண்ணாத பெரும் பழி அல்லவா!

**போரவிட்டிட் டென்னை நீ புறம் போக்கலுற்றால்**
**பின்னையான் யாரைக்கொண்டு எத்தை அந்தோ!**
**எனதென்பதென்? யான் என்பதென்?**
அடியேனை அடியேன் கையிலே காட்டித் தந்தால்
எந்த உபாயம்கொண்டு எந்தப் புருஷார்த்தம் சாதிப்பது?
அடியேன் இழவையன்றோ தேடிக்கொள்வேன்
உடையவன் – உடைமை உறவும் பொருளற்றுப் போகாதோ?

**எனதாவியை இன்னுயிரை மனக்காராமை மன்னி**
**உண்டிட்டாய் இனி உண்டொழியாய்**
தொடங்கினதைக் குறைகிடக்க விடலாமோ?

**கோலமலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ!**
அடியேன் அந்தப்புரப் பரிகரம், தேவரீர் அன்பன் - அத்தாலே
தேவரீர் காட்டவேண்டிய அன்பு இல்லைசெய்யப்போமோ?
அவள்பரிகரம் - என்ற அடியுரம் பார்க்க வேண்டாவோ?
**பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை**
**முன்னை அமரர் முழுமுதலானே!**
**என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நல்நெஞ்சம் தன்னை**
**அகல்விக்கத் தானும் கில்லாய் இனி -**
நம்மிடையே உள்ள ரக்ஷ்ய ரக்ஷக பாவம்
சாக்ஷியோடு கூடிய புருஷாகர பலத்தாலன்றே !
அடியேனுடைய ரக்ஷ்யத்துவத்துக்கடி அவளது க்ருபை
உம்முடைய ரக்ஷகத்துவத்துக்கடி அவளது புருவ நெரிப்பு
நாம் இருவருமே சேர்ந்து ஒழிக்கப் பார்த்தாலும்
நந் தம்மோடு **உறவேல் இங்கு ஒழிக்க ஒண்ணாது** காணும்.

**பெற்று இனிப் போக்குவனோ உன்னை என்தனிப்பேருயிரை?**
தாரகனான உம்மைப்பெற்றபின் இனி விடுவேனோ?
உயிரைவிட்டு உடல் தரிக்குமோ?

ஆகஇப்படியே
தம் ஆணை பெறா ஆணை அன்று என்று
தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொண்டு
ஆழ்வாருடைய பக்தி - அவா - பேசச் செய்ய

என் அவாவறச் சூழ்ந்தாயே என்று ஆழ்வாரே பேசும்படி
ஆழ்வாருடைய அவாவினைக் குளப்படியாக்கி
பெருமான் ஆழ்வார்பால் கொண்ட ஆதரம் கடல்போன்று பெருக
பரதமங்கமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே —
ஸ்ரீபரதாழ்வனை மடிமீதிருத்தி அணைத்து உச்சி முகர்ந்தாற்போலே
ஆழ்வாருடைய விடாய் கெடும்படி அவரை அநுபவிப்பித்து நிற்க

ஆழ்வாரும் – இவ்வளவுகாலம் எம்பெருமான் தம்மை
"உறாமை" யோடே "உற்றேன்" ஆக்காதொழிந்தது
"இனி ; இனி" என்று இருபதின்கால் கூப்பிடும் தம்
ஆர்த்தி அதிகார பூர்த்தியைக் காண்கைக்கும்
தம்மைக்கொண்டு உலகினர்க்கு உணர்த்துகைக்குமே என்று
தாம் கேட்ட கேள்விக்குப் பதிலைத் தாமே ஊஹித்தவராய்
முன்பு ஈசுவரன்தன்னைப் பெறாமையாலே
இழவோடே கூப்பிட்ட அந்த வாயாலேயே
அவாவறச் சூழ் அரியை என்று
ஹரி: என்ற திரு நாமத்திற்குச் சேர
தம்முடைய எல்லாத் தாபங்களையும்
பெருமான் போக்கியமையைப் பிறர் அறியப் பேசி

ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்
அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றும்படி நாடு திருந்த
பாசுரமிடுவித்துக் கொள்ளவேணும் என்கிற பெருமானின் பாரிப்பும் தீர
ஆதித்ய ராம திவாகர அச்யுதபாநுக்களுக்குப்
போகாத ஸம்சாரிகளின் உள்ளிருள் நீங்க
சோஷியாத பிறவிக்கடல் வற்ற
விகஸியாத போதிற்கமல வன்னெஞ்சம் மலர
முடிந்த அவாவிலந்தாதி என்கிறபடியே
நச்சுப்பொய்கையாகாதே அவனே செய்வித்துக்கொண்ட

திருமாலவன் கவி தலைக்கட்டி
நனியாம் பரமபக்தியால் நைந்து
உற்றேன் உகந்து பணிசெய்து
உன பாதம் பெற்றேன் என்கிறபடியே
அவாவற்ற குருகூர்ச் சடகோபனாய் பங்கயத்தாள் கோனை
ஒருமையுற்றுச் சேர்ந்தார் உயர்ந்து.

உயர்வற உயர்நலம் உயைவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே.

## காதலிக்க - நெஞ்சே! நினை-10

(திருவாய்மொழி நூற்றந்தாதிப்படி-பத்தாம்பத்தின் சாரம்)

தாளடைந்தார் தங்கட்குத் தானே வழித்துணையாம்
காளமேகத்தைக் கதியாக்கி மீளுதலாம்(1)
ஏதமிலா(2) விண்ணுலகில் ஏகவெண்ணும் மாறனுமே
கெடுமிடர் வைகுந்தம் கிட்டினாற்போல்(3)
உயர்விண் தனிலுளோரும் வியந்து போற்றிடவே
செறிபொழில் அனந்தபுரப் பதிதன்னில் படவரவில்
கண்துயிலும் மாயற்கும் ஆட்செய்யக் காதலித்து
வேய்மருதோள் இந்திரைகோன் மேவுகின்ற தேசத்தைத்
தான்மருவாத் தன்மையினால் தன்னை யின்னம்
இக்கொடு வுலகில் வைக்குமெனச் சங்கிக்க
மாலும்தான் தெளிவிக்கத் தெளிந்த மாறன்
சார்வாகவே(4) அடியில்(5) தாமுரைத்த பத்திமைதான்
சீரார் பலத்துடனே சேர்ந்ததனைக்(6) கண்டுரைத்து

1.மீண்டுவருதல் என்கிற 2. குற்றமில்லாத 3.கிட்டி அடிமைசெய்தாற்போல்
4.உபாதேயமாக 5.ஆரம்பத்தில் 6.பலன் தந்ததை

ஆனபுகழ் அருள்மாற னாகையாலே - தன்பேறு
மண்ணுலகும் பெற்று மகிழ்ந்திடவே
கண்ணன் கழலிணையில் காதலுறுவார் தம்செயலை
திண்ணமுறச் சுருங்கச் செப்புதலால்
மண்ணவர்க்குத் தாமுபதேசிக்கைத் தலைக்கட்டி
மால் அன்பால் இருளார்ந்த(7) தம்முடம்பை இச்சித்து
இருவிசும்பில் அத்துடனே கொண்டேக எண்ணியே
தம்மிசைவு பார்த்திருக்க-அவன்தன் சுத்திசொல்லி(8)
செஞ்சொற்பரன் தன்மேனி தனில் வஞ்சித்துச்(9) செய்கின்ற
வாஞ்சைதனின்(10) விஞ்சுதலை(11) அவன்தன்னைக் கால்கட்டி
கைவிடுவித்துக் கொண்ட திண்டிறல் மாறனுமே
இன்றுதன்பால் மாலன்செய் பெருவிருப்பை நேர்கண்டு
"அருமாயத்தன் !
அன்றென்னை அருமாயத்து12) அகல்விப்பானென்?
இன்றென்பால் பெருமால் செய்வானென்?" என்ன
சூழ்ந்து நின்றமாலும் இடருற்று(13) நின்றானாய்
அதுமறைக்க மாவிசும்பில் தொல்லை(14) வழிகாட்ட(15)
மாறனுமே
ஆழ்ந்ததனை முற்றும் அநுபவித்து வாழ்ந்தாங்கு(16)
அடியாருடன் இருந்தவாறு நெஞ்சால் கண்டவாற்றை(17)
உரைசெய்து அம்முற்றின்பம் நீங்கிடவே(18)
தனியாக நின்று மிகத்தளர்ந்தவராய் - நனியாம்
பரம பக்தியால் நைந்தவராய்(19) பங்கயத்தாள்
கோனை ஒருமையுற்றுச்(20) சேர்ந்தார் உயர்ந்து -
அம்மாறன்

---

7. தாழ்ந்த 8. அவன்தன் ஆச்ரித வ்யாமோஹம் வியந்து 9. தவறாக 10. தோஷராகம் காட்டுதல் 11.எல்லைகடத்தல் 12.ப்ரக்ருதி வசப்படச் செய்து 13.பதில் சொல்லாது 14. அநாதியான 15. அர்ச்சிராதி வழி உபசாரங்கள் 16.பரமபதத்தில் இருந்தபடி 17.மானஸீக அநுபவத்தை 18.மானஸமாகை யாலே கைகழிய19. பரிபக்குவப் பட்டவராய் 20.நித்ய ஸூரிகளில் ஒருவராகி

இணையடிக்கே அன்புற்று ஆட்செய்ய மாலவனும்
இன்புற்று வந்து நம்மோடும் மண்ணிடையே
மாறன்புகழ் பாடானோ? மனமே! சொல் - ஆதலினால்
மாறனைநீ தாள்தொழுது காதலிக்க - நெஞ்சே! நினை
உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு
உயர்வேதம் நேர்கொண் டுரைத்து - மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல்
வேராகவே விளையும் வீடு

கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் மாறனையே.

தென்குருகூர் நம்பி பாவின் இன்னிசை
பாடித்திரிதலின்றி வேறொன்றும் வேண்டேல்
வாழிமனமே! கைவிடேல் மாறன் திருவடியே.

ஆக இப்படியே
பரத்வ, காரணத்வ, வியாபகத்வ, நியந்த்ருத்வ,
காருணிகத்வ, ஶரண்யத்வ, சக்தத்வ, ஸத்யகாமத்வ,
ஆபத்ஸகத்வ, ஆர்த்திஹரத்வ ஆகிய குணங்களோடு
கூடிய
ஸர்வேசுவரன் - ஸ்வாமி நம்மாழ்வாருக்கு
"மயர்வற மதிநலம் அருளினன்" என்கிறபடியே
பக்தி ஏய்ந்த ஞானத்தைக் கொடுக்க ஆழ்வாரும்

"மறப்பனோ யான் என் மணியையே" என்னும்படி
எம்பெருமான் விஷயத்தில் மறப்பிலராகி
அந்த ஜ்ஞானத்தின் பயனான மோக்ஷத்தை
"நின்செம்மா பாதபற்பு தலை சேர்த்தி" என்கிறபடியே
இருவர் ஸ்வருபத்திற்குச் சேரவும் அறுதியிட்டு

“ஒல்லை வேண்டுவது ஈதே” என்று அதனையே
அருளவேண்டிப் ப்ரார்த்திக்க
அந்த மோக்ஷ புருஷார்த்த(21) பலன்
அவன் உகப்பு ஆகையாலே அதனைப்பெற
“வழுவிலா அடிமை” செய்ய வேண்டியவராக
வழுவிலா அடிமை பழுப்பது
“அந்யருசி ஒழிகையால்” ஆகையாலே
“ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவிலாச்
சிற்றின்பம் ஒழிந்தேன்” என்று அந்யருசி ஒழிய
இந்த இதர விஷய விரக்தி பலன்
பகவத்விஷய ராகமாகையாலே
“கழிய மிக்கதோர் காதலள் இவள்” என்னும்படி
பகவத் விஷயராகம் மிகப்பெருக
பகவத்விஷய அநுராக மிகுதிக்குப் பலன்
ஸித்தோபாய ஸ்வீகாரம் ஆகையாலே(22)
“அலர்மேல் மங்கை உறை மார்பா!
உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே” என்று
உபாய வரணம் பண்ணினவராக(23)
அந்த ஸாதன பலமான உபகாரத்திற்குக்கைம்மாறாக(24)
“உதவிக் கைம்மாறு என் உயிர்” என்று
ஆரத்தழுவி உயிரை அறவிலை செய்யப்புக
அதுவும் மற்று ஆங்கவன் தன்னது ஆகையாலே

---

21 பேற்றின் 22.அருள்புரியவே காத்துக்கொண்டிருக்கும் எம்பெருமானின்
–துணையை நாடுதல் 23.ஸித்தோபாயமாக எம்பெருமானைப் பற்றுகை
24. எம்பெருமான் உபாயவரணம் பண்ணுவித்த உதவிக்கைம்மாறு

கைம்மாறு காணாமல் தடுமாறிக் கலங்க
ப்ரீதியாலே வந்த ஆழ்வாரின் கலக்கம் தீர எம்பெருமான்
ஆத்மவஸ்து ஸ்வரூபத்தை(25)
தேஹாதிகளில் விலக்ஷணமாய்(26)
அநந்யார்ஹ சேஷமாய்(27)
பாகவதசேஷ லக்ஷணமே எல்லை நிலமாய்
ஒளியுடைய இனியபொருளாய்
தன்னை விட்டுப்(28) பிரிக்கமுடியாத விசேஷணமாய்
இருப்பது என்று காட்டிக்கொடுக்க
"நின்ன ஒன்றை உணர்ந்தேன்" என்று
ஆத்மதர்சநம் கைவரப்பெற -
அதுவே புருஷார்த்தம் என்ற அளவோடு நில்லாமல்
ஆத்மதர்சநப் பலன் பகவத் ப்ராப்தி ஆகையாலே -
அதனைத் தரப் ப்ரார்த்திக்க
"மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்" என்று
பகவானும் நாளிட்டுக் கொடுக்க
இந்த பகவத் ப்ராப்தி அணித்தானதற்குப் பலன்
அர்ச்சிராதி மார்க்கத்திலே
தேசவிசேஷத்திற்குப்(29) போவதாகையாலே
அந்த அர்ச்சிராதிவழிக்கு
தாமுகக்கும் அர்ச்சா வடிவினன் திருமோகூர் ஆத்தனை
"திருமோகூர்க் காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதி"
"ஆத்தன் தாமரையடியன்றி மற்றிலம் அரண்" என்று
நிச்சயித்துத் துணைகூட்டிக்கொண்டு அடியரோடு
பேறு பெற்றமையை அறிவித்து
பிறரும் முறையறிந்து உய்வுபெறும்படி
பத்துப் பத்தாலும் வெளியிட்டருளினார்.

---

25. லக்ஷணத்தை 26. தேகத்தைக்காட்டிலும் வேறுபட்டது
27. எம்பெருமானுக்கே அடிமை 28. எம்பெருமானைவிட்டு
29. ஸ்ரீவைகுண்டம்

நல்ல கோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்
தான்னிலறைந்த
அல்லிக் கமலக் கண்ணனை அந்தண்
குருகூர்ச்சடகோபன்
சொல்லப்பட்ட ஆயிரத்தின் பொருளைக்
கற்று வல்லார்கள்
நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட
பெண்டிர் மக்களே.

தென்னரங்கர் சீரருளுக்கு இலக்காகப் பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நம் குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோம்
முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னைதனில் நெஞ்சு ஒன்றும் பேராமல் பெற்றோம்
பிறர் மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ் வாதுமில் குரவர் தாம்வாழி - ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.
தந்தருள வேண்டும் தவத்தோர் தவப்பயனாய்
வந்த முடும்பை மணவாளா! - சிந்தையினால்
நீயுரைத்த மாறன் நினைவின் பொருளனைத்தும்
வாயுரைத்து வாழும் வகை
ஸ்ரீநகர்யாம் மஹாபுர்யாம் தாம்ப்ரபர்ண்யுத்தரே தடே।
ஸ்ரீதிந்த்ரிணீ மூலதாம்நே சடகோபாய மங்களம்॥

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்.
அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே ஶரணம்

## ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்-பட்டருக்கு எம்பார் அருளியவை

1) பக்கம் நோக்கி நின்றலந்தேன் பாவியேன் காண்கின்றிலேன் -
சாதகபக்ஷி போலே எம்பெருமான் அருள்நோக்கி நிற்கை.

2) உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்
ஸ்ரீமந் நாராயணனிடத்திலன்றிப் பிறரிடம் எந்த நன்மையும் வேண்டமாட்டாமை

3) கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக் குலமகள் ஆகை. -
மறந்தும் புறந்தொழாதிருத்தல்.

4) எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே -
தேவதாந்தர பஜனம் பண்ணுவார் ஸஹவாஸம் ஒழிகை.

5) எம்பெருமான் பொன்மலையில் ஏதேனும் ஆவேனே -
உகந்தருளின திவ்யதேசங்களில் வர்த்திக்கை.

6) தெருடியாகில் நெஞ்சே வணங்கு திண்ணமறி
அனுகூல ஸங்கல்பனாக எம்பெருமானை நினைகை.

7) ப்ராதிகூல்யத்தை வருந்தியும் கைவிடுகை -
தீமைபயக்கும் குணங்களுக்கும் செயல்களுக்கும் மூலகாரணமான
அனைத்து ஆசைகளையும் -நசையற விடுகை.

8) உண்ணா நாள் பசியாவதொன்றில்லை - ஓவாதே
நமோ நாராயணா என்று எண்ணா நாளும்
இருக்கெசுச் சாமவேத நாண்மலர்கொண்டுன பாதம்
நண்ணாநாள்
அவைதத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினி நாளே -
ஆழ்வார்களின் ஈரச் சொல்லாலே நெஞ்சை நெகிழ்க்கை.

9) பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே:
அந்தமில் பேரின்பத்தடியரோடு இருந்தமை -
அடியார் பெருமையுணர்ந்து அவர் சகவாஸம் நாடுகை

10) ஆசார்யன் திறத்தில் அடிமைக்கு இழவுபாடனாயிருக்கை.
ஆசார்யன் பக்கல் கைங்கர்யத்தில் ஊன்றியிருக்கை.

# திருவாய்மொழியின் ஏற்றம்

**மண்ணாடின ஸஹ்யஜலம் தோதவத்தி**
**சங்கணித்துறையிலே**
**தெண்ணீராய் அந்தஸ்ஸ்ஸதத்தைக்**
**காட்டுமாப்போலே**
**அல்பசுருதர் கலக்கின சுருதி நன்ஞானத்துறை**
**சேர்ந்து**
**தெளிவுற்று ஆழ்பொருளை அறிவித்தது(ஆசார்ய ஹ்ருதயம்)**

மலையிலிருந்து இழிந்த மண்ணால் கலங்கின நீர் திருவரங்கம் தோதவத்தித் துறையையும் திருக்குருகூர் திருச்சங்கணித் துறையையும் ஸ்பர்ஸித்தவாறே பளிங்குபோன்று தெளிந்ததாய் உள்ளிருக்குமவற்றைக் காட்டுமாப்போலே தெளிந்த கேள்வி ஞானம் இல்லாதவர்களால் (உள்ளபடி அர்த்தம் கூறப்படாமையால்)கலங்கின சுருதிநீர் ஆழ்வாரின் ஞான விகாஸமான திருவாய்மொழித்துறை சேர (திருவாய்மொழி அவதரிக்க)கலக்கம் தீர்ந்து தன்னகத்தே உள்ள உண்மைப்பொருள் துலங்கும்படி ஆயிற்று.

பொன்னித்தோதவத்தித்துறை - **தூய்மறையோர்துறை** ஆகையாலே **தெண்ணீராய்** (மறைக்கு) உள்பொருளான ஸ்ரீ ரங்கநாதனைக் காட்டித்தர பொருநல் சங்கணித்துறை **நன்ஞானத்துறை** (ஆழ்வார்) சார்பாலே **துகில் வண்ணத்தூநீராய்** (மறையின்) **ஆழ்பொருளான** ஸ்ரீரங்கநாதனடியார்க்கு அடியார் அடியார் அடியோங்களே எனக் காட்டித் தந்தது என்று பொருநல்சங்கணித்துறையின் ஏற்றம் காட்டும் நாயனார் உள்உள்ளம் ஓர்ந்து உணரத்தக்கது.

**மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து**
**துறைப்பாற் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தம்**
**கறைப்பாம் பணைப்பள்ளி யானன்பர் ஈட்டங் களித்தருந்த**
**நிறைப்பான் கழலன்றிச் சன்ம விடாய்க்கு நிழலில்லையே.**

சொல்லும் பொருளும் தொகுத்துப் பாசுரப்படி - திருவாய்மொழியாம் தேனை அளித்துள்ள தேவரீர்க்கு ஸ்ரீவைஷ்ணவ உலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது. இதனைக் கற்றோர்கள் உகப்பர், கல்விதன்னில் ஆசையுள்ளோர் பெற்றோம் என உகந்து பின்பு கற்பர். அநுபவிக்க, அநுபவிக்க ஆனந்தமாக உள்ளது.

Dr. A.V. Rangachary, B.A(Hons); M.A., M.Litt., Ph.D.,
Formerly Prof. & H.O.D of Economics
Annamalai University.

தண்டமிழாசான் இராமனென் பவர்க்குத்
தகவுடைப் புதல்வனாய் வந்து
வண்டமிழ்த் திறமும் வைணவச் சமய
வண்ணமும் வாய்த்திட்ட நல்லோன்
கண்டுபோல் சுவைக்கப் பாசுரப் படித்திரு
வாய்மொழி கற்பவர் மகிழ
விண்டுரை செய்தான் முந்தையோர் வழியில்
வியப்பதில் ஒன்றுமே யில்லை

பேராசிரியர் கவிஞர் வித்வான் வி. துரைசாமி எம்.ஏ.,

வைணவ வட்டம் காலமாற்றத்தாலும் பல பிரச்சினைகளாலும் சுருங்கிக்கொண்டுவரும் இந்தக்காலத்தில் வைணவ நூல்களில் அக்கரைகொண்டு இப்படி புதிய முயற்சியில் இறங்கி இருக்கிறீர்கள். மிகவும் பாராட்டிற்குரியது. ஒருநூலில் உள்ளும் புறமும் நல்ல தோய்வு இருந்தாலொழிய இப்படி முயற்சியில் இறங்க முடியாது. தங்கள் சாதனைகள் தொடர அந்த சார்ங்கபாணியை இறைஞ்சுகிறேன்

D.A. ஜோசப்
மதுரை– தமிழாசிரியர் – ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயக் கடல்
ஸ்ரீ.உ.வே. வீரராகவையங்கார் ஸ்வாமியின் மாணவன்

27.7.06.
Pondicherry - 605 011

பாசுரப்படி - திருவாய்மொழித் தொகுப்பு-ஆழ்வார்திருநகரிப் பிறப்பு -மண்ணின்வாசிக்கு நிருபணம்.

பேராசிரியர் கண்ணன் M.Sc., M.Phil மதுரை.